# JOHNSON®

# மிக்ஸர் கிரைண்டர்

## தென்னிந்திய சமையலுக்கு ஏற்ற உறுதியான அமைப்புடன் கூடியது

தென்னிந்தியச் சமையலின் தேவைகளைச் சமாளிக்கும் திறமைதான் எந்த மிக்சர் கிரைண்டருக்கும் ஒரு சோதனையாகும், ஜான்சன் மிக்சர் கிரைண்டர் இந்தச் சோதனையில் வெற்றி பெற்று, இன்று தென்னாடு முழுவதும், மிகச் சிறந்த மிக்சர் கிரைண்டர் என்று பெயர் பெற்றுத் திகழ்கிறது.



அதற்குக் காரணங்கள்
கனரக வேலைகளைச் செய்ய சக்திவாய்ந்த 450 வாட் மோட்டார்



மிகச் சிறந்த முறையில் குளிர்ச்சி அளிக்க, தனிச் சிறப்புடன் கூடிய ஃபேன்





அதிக வசதிக்கும், சிறந்த சுகாதாரத்திற்கும் இரண்டு ஜாடிகள்



பல்வேறு பணிகளைச் செய்ய இரண்டு மல்ட்டி-பர்ப்பஸ் பிளேடுகள்



துப்புரவாக சுத்தம் செய்ய, சுலபமாகக் கழற்றக்கூடிய பாகங்கள்



முழுமையாக வேலை செய்ய சிறப்பாக அமைக்கப்பட்ட பிளேடுகள்



அதிகச் சுழற்சி அளிக்கும் வகையில் அமைக்கப்பட்ட அக்ரிலிக் கலவை ஜாடி



அதிகப் பாதுகாப்பிற்காக உறுதியாகப் பொருத்தப் பட்ட பிளேடுகள்



எளிதாக பிடிக்க, சிறந்த டிசைன் செய்யப்பட்ட கைபிடிகள்

ஒரு வருட உத்திரவாதம், விற்பனைக்குப் பிறகு குறித்த கால சேவை

வேகத்தை சிரமமில்லாமல் மாற்ற ஸ்பெஷல் இன்ச்சர் ஸ்விட்ச்

உங்கள் சமையல் அறைக்கு ஏற்ற வண்ணத்தை தேர்ந்தெடுத்து வாங்க நான்கு மனமகிழ்வூட்டும் நிறங்கள்

தென்னிந்தியாவில் அதிக அளவில் சில்லரை விற்பனை நிலையங்கள்

**JOHNSON** — சக்தி, சிறப்புத்தன்மை, செயல்திறன் ஆகியவற்றில் அதிஉன்னதமானது

Parade BE/8161

"ஒரு பெண்மணி மாடியிலிருந்து கீழே சென்ற ஊர்வலத்தை எட்டிப் பார்த்தாள். திடீரென அவளுக்குத் தன்னுடைய நெக்லஸ் ஞாபகம் வந்தது. கழுத்தைத் தொட்டுப் பார்த்தாள். காணோம். பதறிப் போய் "என் நெக்லஸைக் காணோம்" என்று வீரிட்டாள். கீழே ஊர்வலத்தின் இடையில் விழுந்திருக்குமோ? பக்கத்துப் போர்ஷன்காரி வந்து அமைதியாகத் தேடுமாறு கூறினாள். மறுபடி தேடினாள். நெக்லஸ் கழன்று அவள் அணிந்திருந்த ஸ்வெட்டருக்கும் நெஞ்சுக்கும் இடையில் புதைந்து கிடந்தது. "நெக்லஸ்கிடைத்து விட்டது" என்று மகிழ்ச்சியுடன் கூக்குரலிட்டாள்.

"உண்மை என்னவெனில் நெக்லஸ் தொலையவுமில்லை; பின்னர் அது கிடைக்கவுமில்லை. பார்க்கப்போனால் நாம் எல்லோருமே அந்தப் பெண்மணியின் நிலையில்தான் இருக்கிறோம். நம்மை நாமே அறிந்துகொள்ளாது இல்லாத ஒன்றுக்காக ஏங்குகிறோம். அதைத் தேடி அலைகிறோம்."

இதுபோன்ற சின்னச் சின்னக் குட்டிக் கதைகள் மூலம் கடவுள், தியானம் இவைகளைப் பற்றி 52 தேசங்களில் வெளி நாட்டினருக்கு உணர்த்தியவர் ஸ்வாமி முக்தானந்தா. கர்நாடகத்தைச் சேர்ந்தவர். பம்பாயிலிருந்து ஐம்பது மைல் வடக்கே கணேஷ்புரியில் ஓர் ஆசிரமம் நிறுவியிருக்கிறார். மொபைல் ஆஸ்பத்திரி, ஏழை எளியவர்களுக்கு உதவுவது, ஆதிவாசிகளுக்கு வீடு கட்டித் தருவது போன்ற பல நல்ல காரியங்களை ஆசிரமம் செய்து வருகிறது. சென்னையில் ஆறு நாள் முகாமிட்டு 'சித்த வழி தியானத்'தைக் குறித்து முக்தானந்தாவின் சீடர்கள் சொற்பொழிவு ஆற்றினார்கள்.— பிரபலஸ்தர்கள் தலைமையில்.

ஸ்வாமி முக்தானந்தாவின் சீடர்களில் முக்கியமானவர் — கிரிஸ்டோபர் ஃபோர்ஸைத். 42 வயதான ஆஸ்திரேலியர். கிரிக்கெட்டில் ஈடுபாடுள்ள இவர், 'கேரி பேக்கர் சீரிஸ்' வெற்றிகரமாக நடக்க உதவினாராம்.

இந்தப்பத்திரிகையாளர் எவ்விதம் ஸ்வாமியிடம் செலுத்தப்பட்டார்?

"1978ம் ஆண்டு ஸ்வாமி ஆஸ்திரேலியாவுக்கு வந்து தங்கி உரை ஆற்றினார், எனக்கு அழைப்பு வந்தது. இதில் எல்லாம் எனக்கு நம்பிக்கை இல்லை; இருந்தாலும் போய்ப் பார்த்தேன். அன்றே ஒரு மாறுதல் என்னிடம் தோன்றியது. ஒரு மௌனமான பரிமாறல் எனக்கும் அவருக்கும் ஏற்பட்டு நான் அவரிடம் ஈர்க்கப்பட்டேன். பார்த்த மாத்திரத்திலேயே 'இவர் வித்தியாசமானவர், சொல்வதைச் செயலில் கடைப்பிடிப்பவர்' என்று உணர்ந்தேன்" என்கிறார்.

ஏதாவது பலன் இருக்கிறதா?

"நிச்சயமாக. தினமும் குறைந்தபட்சம் ஒரு மணி நேரம் தியானம் புரிந்துவருகிறேன். ஒரு நல்ல தகப்பனாகவும் நல்ல எழுத்தாளனாகவும் மாறியிருக்கிறேன். மற்றவர்களை அதிகமாக நேசிக்கக் கற்றுக் கொண்டுவிட்டேன்." என்று இதய சத்தியுடன் சொல்கிறார்..

தற்போது பத்திரிகைப் பணியிலிருந்து விலகி ஸ்வாமியின் சீடராக ஊர் ஊராகச் சென்று கொண்டிருக்கிறார். ஒரு நாவல் எழுத எண்ணம் இருக்கிறது. ஓர் உண்மையான சம்பவத்தை அடிப்படையாகக் கொண்டதாம். அமெரிக்காவில் போதைப் பொருள் கடத்துவதில் தீவிரமாக இருந்த ஒருவன் ஸ்வாமிஜியின் உபதேசத்தால் மாறிப் போனதைச் சித்திரிக்கும் கதையாக இருக்குமாம்.

அது சரி, சித்த யோகம் என்பது என்ன?

"இந்த தீக்ஷை சித்தர்களால் மட்டும்தான் கொடுக்க முடியுமாதலால் இந்த யோகத்துக்குப் பெயரே சித்தயோகம் எனப்பட்டது. ஓம் நம: சிவாய மந்திரத்தின் உட்பொருள் தெரிந்து, சித்த குருவிடமிருந்து உயிர்பெற்ற மந்திரமாகப் பெற்றுக் கொண்டுசதா மந்திர ஸ்மரணத்துடன் வாழ்க்கை நடத்தினால் இயற்கையாகவே நமக்கு ஆத்மஞானம் உண்டாகிவிடும். இந்த மந்திரம்தான் குரு. இதுதான் ஆத்மா. இது எப்படி வெளி வந்ததோ அப்படியே ஜெபம் செய்து உள்ளே திரும்பச் செய்தால் பரம்பொருளாக மாறிவிடும். இதுவே மந்திரத்தின் இரகஸ்யம்"என்கிறார் முக்தானந்தர். "இதைப் பயின்று நன்மை பெற மதமாற்றம் அவசியமில்லை" என்கிறார்.

— வாதூலன்





# ஸ்ரீமநதும்.....



✖ செஞ்சுரி கண்ட யஷ்பால் ✖ அடிபட்ட வெங்சர்க்கார்

**ஐ**ந்தாவது டெஸ்ட் டிரா ஆனதால் இந்தியாவின் கரம் மேலும் பலப்பட்டு விட்டது. ஏற்கனவே ஒரு மாட்சில் வெற்றி பெற்றிருப்பதால் கடைசி கான்பூர் டெஸ்ட்டில் வெற்றி பெறுவிடினும் தோல்வியைத்தழுவியதாகாது. மேலும் கான்பூர் டெஸ்ட்டும் அநேகமாக டிராவில்தான் முடியும் என எதிர்பார்க்கலாமாதலால் (அங்கே பிட்ச் பாட்ஸ்மன்களுக்கே உதவுபடி) இந்தியா 1–0 என்ற எண்ணிக்கையில் வெற்றி பெற்றால் வியப்பதற்கில்லை.

இந்தியா, இங்கிலாந்து அல்லது வேறு எந்த நாடாயினும் சரி, பிட்ச் அந்தந்த நாட்டு ஆட்டக்காரருக்கு வசதியாகவே தயாரிக்கப்படுவது வழக்கமாகி விட்டது. சேப்பாக்கத்திலும் அவ்வாறே பாட்ஸ்மன்களுக்கு உதவுபடியான பிட்ச் தயாரிக்கப்பட்டதாய்க் கருதலாம். உயிரற்ற அந்த பிட்ச் நாளுக்கு நாள் பந்தின் வேகத்தைக் குறைத்து வந்தது. போலர்கள் உற்சாகமிழந்ததுடன் அதன் விளைவாக ஒரு மணி நேரத்துக்குச் சுமார் பத்து ஓவர்கள்தான் வீசப்பட்டன. ஆனால் கூடியிருந்த 50,000 மக்களுக்கு விசுவநாத்தின் கலை நுணுக்கம் மிக்க இரட்டைச் சதமும், திலிப் வெங்சர்க்காரின் அழகிய 70 ரன்களும் யஷ்பால் சர்மா சதம் போட்டுத் தமது டெஸ்ட் தகுதியை ஸ்திரப்படுத்திக் கொண்டதும் கூச்சின் ஆர்ப்பாட்டமான சதமும், நான்காம் நாளன்று இங்கிலாந்து சரிந்து விடாமல் காத்த கோவர்–போதமின் பொறுமையான பார்ட்னர்ஷிப்பும் அரிய விருந்துகளாய் அமைந்தன.

இந்த நிகழ்ச்சிகளுக்கெல்லாம் அடிப்படை ஃபிளெட்சர் டாஸ் வென்றதும் ஃபீல்ட் செய்வதென முடிவெடுத்ததுதான். இதுபற்றி முதல் நாள் முழுவதும் சர்ச்சை நடந்து பலவிதமான அபிப்பிராயங்கள் கூறப்பட்டன.

ஃபிளெட்சர் எடுத்த முடிவு காரணமாக கவாஸ்கர் அணி நாலு விக்கெட் நஷ்டத்துக்கு 481 ரன்கள் எடுக்க முடிந்தது உண்மையே என்றாலும் ஃபிளெட்சர் செய்த முடிவில் தவறு ஏதும் இருப்பதாக எனக்குத் தோன்றவில்லை. பிட்ச் பாட்ஸ்மன்களுக்கு உதவும் என்பது அவருக்குத் தெரிந்ததே. போலர்களுக்கு உதவுவது எனில் வேகப் பந்து வீச்சாளருக்குத்தான் அது ஓரளவேனும் உதவ முடியும். அதுவும் முதல் நாள் காலையில் பிட்ச் புத்தம் புதிதாய் இருக்கும்போதுதான்! அவரிடமோ நான்கு வேகப் பந்து வீச்சாளர் இருந்தனர். இவ்விதம் யோசித்து ஃபிளெட்சர் எடுத்த சரியான முடிவு இங்கிலாந்துக்குச் சாதகமாய் அமையவில்லை எனில் காரணம் கோட்டை விடப்பட்ட காட்சுகளே. கவாஸ்கர், வெங்சர்க்கார் இருவரும் ஸ்லிப்பில் கொடுத்த காட்சுகளை டால்வரேயும் கூச்சும் பிடிக்காமல் விட்டு அவர்களைத் தொடர்ந்து ஆட அனுமதித்தனர். விசுவநாத் கொடுத்த காட்சை காட்டிங் கைநழுவ விட்டார். இந்தக் காட்சுகள் பிடிக்கப்பட்டிருந்தால் மாட்சின் போக்கே வேறு மாதிரியிருந்திருக்கும். ஃபிளெட்சர் எடுத்த முடிவு தவறல்ல என்பதும் நிரூபணமாகியிருக்கும்.

விசுவநாத் தமது டெஸ்ட் அனுபவத்தில் மிக நீண்ட நேரம் ஆடியது இந்த மாட்சில்தான். மிக அதிகமான ரன்கள் எடுத்ததும் இந்த டெஸ்ட்டில்தான். 632 நிமிஷங்கள் ஆடி 222 ரன்கள் எடுத்தார். 31 பவுண்டரிகள் அடித்தார். இருந்தாலும் டில்லியில் அவர் அடித்த சதமே இதை விடவும் சிறந்தது என்று நான் சொல்வேன். இந்த மாட்சில்

பி.என். சுந்தரேசன்



✖ சதம் கண்ட கூச்

அவர்ரன் ஏதும் எடுக்காத முன்பே அவுட் ஆகி இருக்க வேண்டும். அதிர்ஷ்ட வசமாய்த் தப்பினார். இதன் பிறகு முதல் நாள் முழுவதும் அவர் தற்காப்பு செய்துகொண்டு ஆடினார். இரண்டாம் நாள்தான் கட்டுப்பாடுகளைத் தளர்த்தி எழிலார்ந்த டிரைவ்களும், நளினமான லேட்கட்களும், தமக்கே உரித்தான பாணியில் ஸ்குவேர் டிரைவ்களும் செய்தார். இரண்டாவது செஞ்சுரியை அவர் எட்டிப் பிடித்தபோது இடிமுழக்கம் போல் கரகோஷம் பல நிமிஷங்கள் நீடித்தது. அவருக்கும் சரி, அவரது ரசிகர்களுக்கும் சரி, அன்று மறக்க முடியாத திருநாள்.

யஷ்பால் சர்மா டெஸ்ட் அணியில் தமது இடத்தை ஸ்திரப்படுத்திக் கொள்வதற்காக ஆரம்பத்தில் ரொம்ப நிதானமாய் ஆடினார். ஆனால் பிறகு புயல் போல் சீறி எழுந்து மின்னல் தாக்குதல்களை நடத்தினார். செஞ்சுரி போட்ட பிறகு அல்லாட் வீசிய பந்துகளில் அடுத்து அடுத்து இரண்டு ஸிக்ஸர்கள் அடித்து ரசிகர்களின் உள்ளங்களை அள்ளிக் கொண்டு போனார்! அவர் அவுட்டாகும் போது 140 ரன்கள் எடுத்திருந்தார்.

கபில்தேவின் பந்து வீச்சை நொறுக்கித் தள்ளிய கூச் நன்கு ஜொலித்தார். பாய்காட்டின் இடத்தைப் பெற்ற டாவ்லரே கூச்சுடன் சேர்ந்து கொண்டு இருவருமாக 155 ரன்கள் எடுத்தனர். இந்த அபார ஆரம்பத்துக்குப் பிறகு நான்காம் நாள் காலை 195 ரன்களுக்கு மூன்று விக்கெட்டுகள் விழுந்து விட்டன. இங்கிலாந்து ஆபத்தில் சிக்கிக் கொண்டது போல் தோன்றியது. ஆனால் கோவரும் (64) போதமும் (53) புத்திசாலித்தனமாக ஆடித் தமது அணியைப் பத்திரமாகக் கரை சேர்த்தனர். இறுதி நாளன்றுதான் இங்கிலாந்தின் முதல் இன்னிங்ஸ் 328 ரன்களுக்கு முடிந்தது. இதன் பின் ஆட்டம் வெறும் ஏமாற்றம் தான். மூன்று நாள் விருந்துக்கு இரண்டு நாள் மருந்து!

1933ல் ஆஸ்திரேலியாவுக்கும் இங்கிலாந்துக்கும் இடையில் ஸிட்னியில் நடந்த ஒரு டெஸ்டை இங்கு நினைவுகூர்வது பொருந்தும். நாலாம் நாள் மாலை இங்கிலாந்து ஆட்டக்காரர்கள் பெவிலியன் திரும்பும் போது காப்டன் ஜார்டைன் தமது இடதுகை ஸ்பின்னர் வெரிடியிடம் சொன்னார்: ''அலெக்ஸாந்தரின் அடிச்சுவடுகளை மறக்காதே!''

அலெக்ஸாந்தர் ஆஸ்திரேலிய வேகப் பந்து வீச்சாளர். அவர் பந்து வீசும்போது தமது அடிச்சுவடுகளைப் பிட்சில் பதித்திருந்தார். வெரிடிக்குப் புரிந்து விட்டது. அந்தப் பாதச் சுவடுகளைப் பயன்படுத்திப் பந்து வீசச் சொல்கிறார் என்று. அவை தாக்குதல் கோணத்துக்குச் சற்று அப்பால் இருந்த போதிலும் அவற்றின் மீதே பந்து விழுந்து திரும்புமாறு செய்து ஐந்து விக்கெட்டுகளை எடுத்தார். ஆஸ்திரேலியா குறைந்த எண்ணிக்கையில் அவுட் ஆகிவிட, அதன் பின் இங்கிலாந்து எளிதாக வெற்றி கண்டது. சென்னையிலும் இந்த மாட்சின் போது அதே போலப் பாதச் சுவடுகள் இருந்தன. ஆனால் வெரிடியைப் போல் அவற்றைத் தங்கள் அணிக்குச் சாதகமாக்கிக் கொள்கிற பேராற்றல் தோஷிக்கோ ரவி சாஸ்திரிக்கோ இருக்கவில்லையே!

தமிழாக்கம்: **குட்டி கிருஷ்ணன்**
புகைப்படங்கள்: **பாலாஜி**

ஒருவன்: இந்த ஹோட்டலில் இன்று டிபனே, நன்றாக இருக்காது!

மற்றொருவன்: சாப்பிடாமலேயே எப்படிச் சொல்றே?

அவன்: ''நேற்று நான் சரியாகவே மாவாட்டலையே, அதனால்தான்!''
—சுசீலா நாதன்



# போதமின் அபிநயம்

• வுட்லண்ட்ஸ் ஹோட்டலில் இந்தியக் குழுவுக்கு வரவேற்பு. காப்டன் காவஸ்கர் ''நான் நீண்ட சொற்பொழிவு நிகழ்த்தப் போகிறேன்! கபில்தேவ் நான் நீளமாகப் பேசினால் உதைப்பேன்னார். அவருக்குக் கோபம் வரவழைக்கவே நீண்ட பேச்சு! அவர் கோபம் பந்து வீச்சிலும் பாட்டிங்கிலும் பிரதிபலித்தால் போதுமே!''

• ''என்ன பந்தை அடிக்காமல் குனியறே?'' போதமின் அபிநயம்.

''உன் பந்தைப் பிடிப்பதற்கு ஏணிதான் வேணும்!'' என்று மட்டையை உயர்த்தித் தூக்கிக் காட்டினார் வெஸ்பாள்!

ஒரு அறுவை:

• ''நோ பால்!''

''நோ! வெஸ்பாள் செஞ்சுரி!''

• பாப் வில்லிஸ் பந்தில்வெங்சர்க்காருக்குத் தலையில் பலத்த அடி. கபில் முன்யோசனையுடன் ஹெல்மெட் அணியச் சொல்லியும் வெங்சர்க்கார் அணியாதது அவரது தலையெழுத்து! வெங்சர்க்காரை இரு முறை C. T. Scannerல் பரிட்சித்தார், நியூரோ சர்ஜன் டாக்டர் நரேந்திரன்! இந்த விசேஷக் கருவி டெல்லி, பம்பாய், சென்னையில் மட்டுமே உண்டு. பிராக்சரோ கட்டியோ கான்ஸரோ உடலுக்குள் எந்தப் பகுதியில் என்ன கோளாறுனாலும் இது கண்டு பிடித்துச் சொல்லிவிடுமாம்! காப்டன் காவஸ்கருக்கும் முகத்தில் C. T. Scanner பரிட்சை நடைபெற்றது. நல்வாழ்வுத் துறை அமைச்சர் ஹாண்டே ''வெங்சர்க்கார் ஓ.கே! அவர் ஆட வந்துவிடுவார்!'' என்று உறுதி அளித்தார்.

• விசுவநாத் சேப்பாக்கத்தில் முதல் டபுள் செஞ்சுரி போட்ட இந்திய பாட்ஸ்மேன். விசுவநாத் டபுள் செஞ்சுரியை அணுகிய போது கிரிக்கெட் நிருபர்கள் ரிக்கார்டு புத்தகங்களை அலசத் தொடங்கினர். டெஸ்ட்களில் டபுள் செஞ்சுரி போட்ட இந்திய பாட்ஸ்மன்கள் கனில் கவாஸ்கர், பட்டோடி, சர்தேசாய், மன்காட், உம்ரிகர்.

• தமிழகப் போக்குவரத்து மந்திரி முத்துசாமி டிரான்ஸிஸ்டரைக் காதில் வைத்துத் தமிழ் கமெண்டரி கேட்டபடி பவனி வந்து கொண்டிருந்தார். டெஸ்ட்டில் காணப்பட்ட வி.ஐ.பி.க்களில் ஒரு சிலர்: முதல்வர் எம்.ஜி.ஆர். திரு நெடுஞ்செழியன், டாக்டர் ஹாண்டே, திரு ராகவானந்தம், ம.பொ.சி. ராஜாராம், ராஜா சர் முத்தையா செட்டியார், வி. சுப்பிரமணியம், மத்திய மந்திரி ஆர்.வி. சுவாமிநாதன், ஜெயலலிதா, விஜயகுமாரி, ஜெமினி கணேசன், டைப்பிஸ்ட் கோபு, மிருதங்க வித்வான் சிவராமன்.

ஒரு கடி:

• ''டவாரே சுபாஷ் போஸ் பக்தராக்கும்!''

''எதனால் அப்படிச் சொல்றே?''

''அவர் பார்வர்டு பிளாக் ஆசாமி!''

• சேப்பாக்கம் மைதானத்தில் பிரணப் ராயின் டெஸ்ட் அறிமுகம். இவரது தந்தை பங்கஜ்ராய் 1951-52ல் சேப்பாக்கத்தில் செஞ்சுரி போட்டுப் புகழ் பரப்பியவர். பிரணப் ராய் 6 ரன்களில் 'அவுட்' ஆனார். அவரது அவுட்' ஒரு பிரச்னை. பந்து அவரது முன்னங்கையில்தான் பட்டதாக காப்டன் கவாஸ்கர் சொன்னார்! நான்காம் நாள் காட்டிங் அவுட் ஆனதும் பிரச்னை தான். 'தானிக்கு இனி சரியாப் போயிந்தி' என்று அம்பயர்கள் எண்ணியிருக்கலாம்!

**ஸ்ரீராமன் கருத்து:** டாஸ்ஸில் தோல்வியுற்றும் அதிர்ஷ்டம் பாட்டிங் செய்யச் சந்தர்ப்பம் கிடைத்தது! 481 ரன்களுக்கு மேல் முதல் இன்னிங்ஸில் குவிக்கவும் முடிந்தது. இதன் பிறகும் இந்தியக் குழு வெற்றிக்குப் பாடுபடவில்லையானால் முனைப்பு இல்லாததே காரணம்!

**ஜெயசிம்மா அபிப்பிராயம்:** ஆட்டக்காரர்களைச் சொல்லிக் குற்றமில்லை! படு மந்தமான விக்கெட் செய்த கொடுமை!

பிரிட்டிஷ் பத்திரிகை விமர்சகர்கள் விஷய ஞானமுள்ள சென்னை ரசிகர்களைப் பாராட்டியிருக்கிறார்கள். வேண்டுகோளுக்குச் செவி சாய்த்து மைதானத்துக்குள் உட்புகுந்து இடைஞ்சல் தராத சேப்பாக்கம் கிரிக்கெட் ரசிகர்களைச் சென்னை நகர போலீஸ் கமிஷனர் ஸ்ரீபால் மனமுவந்து பாராட்டினார். நாம் சென்னை கிரிக்கெட் சங்கத்தைப் பாராட்டுவோமே, சிறப்பாக மாட்சை நடத்தித் தந்ததற்காக!

-குண்டுமணி

படம் : பாலாஜி

✻ டபுள் செஞ்சுரி எடுத்த விசுவநாத்





பேசக்
கற்றுக்கொள்ளுங்கள்

ஆங்கிலத்தில்

கடிதம் எழுதக்
கற்றுக்கொள்ளுங்கள்




**Big Size**
**384 Pages**
**Price 21/-**
**Postage**
**Rs. 4/-**

**RAPIDEX**
**ENGLISH SPEAKING COURSE**

தமிழ், தெலுங்கு, மலையாளம், கன்னடம், ஹிந்தி, மராட்டி, வங்காளம், பஞ்சாபி மற்றும் குஜராத்தி மொழிகளில் தனித்தனியாகக் கிடைக்கும்.

- எளிய நடையில் பயனுற அமைந்த 'ரெபிடெக்ஸ் இங்கிலீஷ் கோர்ஸி'னைத் தாமே பயின்று ஆங்கில மொழி வட்டாரங்களில் வெற்றி நடை போடுங்கள்.
- மொழியியல் அடிப்படையில் இதன் புதுமுறை அமைப்பும், தெளிவான மொழி நடையும் படித்த மாத்திரத்திலேயே மனதிற் பதியவைக்க வல்லது.
- இதுவரை 80 லட்சம் பேர் படித்துப் பயன் பெற்றது.
- ஆசிரியர்கள், அறிஞர்கள் மற்றும் கல்வியாளர்களால் பரிந்துரைக்கப் பட்டது.
- பெயர் பெற்ற பத்திரிகைகளின் விமரிசனக் குழுவினரால் புகழாரம் சூட்டப்பட்டது.

மொழியைக் குறிப்பிட்டு
ஆர்டர் அனுப்புக.




**Big Size**
**394 Pages**
**Price 21/-**
**Postage**
**Rs. 4/-**

கடிதங்கள் வரைவது விளையாட்டல்ல. ஆனால் உங்களுக்காக இக் கலையை விளையாட்டைப் போலச் செய்து தந்துள்ளோம். நண்பருக்குக் கடிதம் எழுதுங்கள் அல்லது நிறுவனத்துக்கு எழுதுங்கள்—எந்தச் சூழ்நிலையிலும் உங்களுக்கு உதவுவது

***Rapidex***
***Self Letter Drafting Course***

இதன் சிறப்பியல்புகள்—

- விதவிதமான வாக்கியங்கள், பல வேறு சொற்றொடர்கள்.
- ஒரே சூழலில் விதவிதமான வாக்கியங்கள், பல்வேறு சொற்றொடர்கள்.
- விரும்பும் வாக்கியங்களை நீங்களே தேர்ந்தெடுக்கலாம்.
- வேண்டியபடி கோர்வையாக அமைத்துக்கொள்ளலாம்.
- நீங்கள் விரும்பிய கடிதம் இதோ தயார்.

மன உளைச்சலின்றி முதற்தரமான கடிதங்கள் வரைய அற்புத சாதனம்.

மூன்று பகுதிகளாக அமைந்த இப் புத்தகம் சொந்த, சமூக, வணிகக் கடிதங்கள் வரையவும், வேலைக்கான விண்ணப்பங்கள் எழுதவும் நம்பகமான வழிகாட்டி.

*AVAILABLE AT leading book shops, A. H. Wheeler's and Higginbotham's Railway Book Stalls throughout India.*



or ask by V.P.P. from

**PUSTAK MAHAL** KHARI BAOLI DELHI-6
New Show Room : 10-B, Netaji Subhash Marg, Darya Ganj, New Delhi-2

VANDANA/PM/Tam.1




ஓட்டப் பந்தயத்துக்கு பயிற்சி பண்றோம்!


வெற்றி நடை!
தண்ணீர் தண்ணீர்!
டைரக்ஷன்:
கே. பாலசந்தர்

# 50; 60; 65!

கல்கி பத்திரிகை தொடங்கப்பட்டபோது அதற்குத் தம்மிடம் இருந்த ஓர் அச்சு இயந்திரத்தை ஸெகண்ட் ஹாண்ட் விலைக்கு முதன் முதலில் கொடுத்து உதவியவர் அன்றைய கலைமகள் அதிபர் நாராயணசாமி. அந்த இயந்திரம் இன்றும் நமது அச்சகத்தில் புரூப் எடுக்க உதவி வருகிறது. அச்சு இயந்திரத்தை மட்டுமின்றி நல்ல யோசனைகளையும் கூறி உதவினார் நாராயணசாமி. நாற்பது வருஷங்களாகக் கல்கி தமிழ் மக்களின் ஏகோபித்த பாராட்டுதலையும் நன்மதிப்பையும் பெற்று வருகிறது என்றால் அதற்கு நாராயணசாமியின் ராசியான கை இதனை ஆரம்பித்து வைத்ததும் ஒரு காரணம். நாராயணசாமிக்குப் பிறகு அவர் மகன் ராமரத்தினம் அவர்களும் கல்கி நிறுவனத்தினிடம் சகோதர பாசம் கொண்டிருந்தார். ஆகவே இன்று கலைமகள் பொன் விழா காண்கிற நேரத்தில் நம் மனத்தில் அளப்பரிய மகிழ்ச்சியோடு நன்றியும் பொங்குகிறது.

கலைமகள் என்றதுமே கி. வா. ஜ. அவர்கள் நினைவும் நமக்கு வரும். 1935ம் ஆண்டிலிருந்து அதன் ஆசிரியர் பொறுப்பேற்று, கடந்த 47 ஆண்டுகளாக அதன் இலக்கியத் தரம் காத்து வருவதுடன் மக்களின் ரசனையையும் வளர்த்து வருகிறார் அவர். ஞானபீடப் பரிசு பெற்ற அகிலன் உள்பட எத்தனையோ புதிய எழுத்தாளர்களை உருவாக்கினார். அண்மைக் காலமாக கி.வா.ஜ. உடல்நிலை சற்றுப் பாதிக்கப்பட்டிருந்தது. இப்போது மீண்டும் பொது நிகழ்ச்சிகளில் அவர் பங்கேற்பதைக் காண அகமகிழ்ந்து வாகீச கலாநிதியை வணங்குகிறோம். பத்திரிகையும் அதன் ஆசிரியரும் சதம், நாட் அவுட்டாக விளங்க வாழ்த்துகிறோம்.

  

பண்டைத் தமிழ் இலக்கியங்களைத் திரட்டி, தொகுத்து, பிழையின்றி அச்சிட்டு, உறுதியான நல்ல புத்தக உருக் கொடுத்து அரும்பணியாற்றி வரும் சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம் அண்மையில் மணிவிழா கண்டது. மிகப் பெரிய தமிழ்த் தொண்டாற்றி வரும் இந்நிறுவனத்துக்கும் அதன் ஆட்சியர் வ. சுப்பையா பிள்ளைக்கும் தமிழ்கூறு நல்லுலகம் பெரிதும் கடமைப் பட்டிருக்கிறது.

மணிவிழாவில் பங்கேற்று வாழ்த்த வந்த சி. சுப்பிரமண்யம், 'தமிழ், காலத்துக்கேற்ற வளர்ச்சி பெறவேண்டுமானால் பிற மொழிகளிலிருந்து வார்த்தைகளைத் தாராளமாகச் சேர்த்துக் கொண்டு அவற்றைத் தமிழாகவே ஆக்கிக்கொண்டு விடவேண்டும்' என்ற நல்ல கருத்தைத் தெரிவித்தார். உடனே அமைச்சர் வீரப்பனுக்கு வீராவேசம் வந்து விட்டது. 'அதெப்படி? தவிர்க்க முடியாத நேரத்தில் மட்டும் பிறமொழியிலிருந்து ஏற்றுக்கொள்ளலாமே தவிர, மற்றபடி வேற்றுமொழி வார்த்தைகளைக் கிட்டத்தில் நெருங்க விடக்கூடாது' என்றார்.

லத்தீனிலிருந்தும் கிரீக்கிலிருந்தும் ஏன் ஹிந்தி, சமஸ்கிருதம், தமிழ் ஆகியவற்றிலிருந்தும் வார்த்தைகளை ஏற்று, அவற்றை ஆங்கிலமாகவே ஆக்கிவிட்ட ஆங்கிலேயர், இந்த வார்த்தைகளுக்கு ஏற்கனவே ஆங்கிலத்தில் ஏதேனும் பதம் இருக்கிறதா இல்லையா என்றெல்லாம் யோசித்துக் கொண்டிருக்கவில்லை. அந்த அசட்டுத்தனத்தை அவர்கள் செய்திருந்தால் ஆங்கிலம் இந்த அளவுக்கு உலக மொழியாக வளர்ச்சி யடைந்திருக்கவே முடியாது. ஒரு சொல்லினிடத்தில் நுணுக்கமான அர்த்த வித்தியாசங்களுடன் கூடிய பல வார்த்தைகளை அவர்கள் சிருஷ்டித்திருக்கவும் முடியாது. ஒரு மொழியின் வளர்ச்சி வார்த்தைகளை மொழி பெயர்த்து அகராதிகள் தயாரிப்பதிலே இல்லை. பல்வேறு துறைகளிலே நவீன கருத்

1982 ஜனவரி 31
துன்மதி தை 18
மலர்: 40 இதழ்: 27



கல்கி



தமிழ்த்திரு நாடு தன்னைப் பெற்ற எங்கள்
தாயென்று கும்பிடடி பாப்பா -பாரதியார்

துக்களை எந்த அளவுக்கு அம்மொழியிலே எடுத்துச் சொல்ல முடிகிறது என்பதிலே தான் இருக்கிறது. கல்லூரியில் தமிழில் படிக்கும்போதும் சரி, படித்ததை வாழ்க்கையில் பயன்படுத்தும்போதும் சரி, மொழியை விடவும் ஞானம் கூட்டுவதும் பெறுவதுமே முக்கியம் என்பதை உணர்ந்து எதிலும் பிரிஸைஸ் அர்த்தத்தை உணர்த்த ஆங்கில வார்த்தைகளைத் தாராளமாகவே உபயோகியுங்கள் என்று பச்சைக் கொடி காட்டிவிட்டால் தமிழ் இயல்பாகத் தானாகவே பல ஆங்கிலச் சொற்களைச் சுவீகரித்துக் கொண்டு விரைவாக வளரும்.

★ ★ ★

**வ**ழக்கமாகவே அமைச்சர்கள் பங்கேற்கும் விழாக்களுக்கு முக்கியத்துவம் தரும் அரசு ஏடான தமிழரசு, தனது சமீபத்திய இதழில் பாரதி பற்றிய கட்டுரைகளையும், பாரதி நூற்றாண்டு விழா கோலாகலங்களையும் ஒரு பக்கம் விடாமல் பிரசுரித்திருக்கிறது. இந்த 1–1–82 இதழில் ஒரு ப்ளோ-அப் வண்ணப் போஸ்டரும் வழவழா காகிதத்தில் வழங்கி இருக்கிறார்கள். பாரதி சிறப்பிதழாயிற்றே பாரதி போஸ்டராகத்தான் இருக்கும் என்று ஆர்வத்துடன் பிரித்தால்..... வேறென்ன, முதல்வரின் கவர்ச்சிப் படம்தான்! மக்களின் வரிப் பணத்தில் தனிநபர் பிரபையை வளர்த்துக் கொள்கிற மோகம் இன்று அதிகாரத்தில் உள்ள யாரைத்தான் விட்டுவைத்தது? முதல்வருக்கு ஜனவரி 17ல் 65 வயது பூர்த்தியாயிற்று. அவர் தம் பிறந்த நாளைக் கொண்டாடுவதில்லையாம், சொல்லிக் கொள்கிறார்கள்.

பல்லாண்டு வாழ்க!

---

# அணையாத ஜோதி



**சபாநாயகர் ராஜாராம் அண்மையில் காலமான ஜோதிர்மாயி பாஸுவைப் பற்றிக் கூறியது:**

''ஜோதிர்மாயி பாஸு பதின்மூன்று வருடம் டீ ருசி பார்ப்பவராக (Tea taster) லண்டனில் பணியாற்றினார். தேயிலையைக் குறித்து அவருக்குத் தெரியாத விஷயமே கிடையாது. வெளிநாடு போகும்போதெல்லாம் நம் தேயிலையைப் பற்றி உயர்த்திச் சொல்லித் தேயிலையின் விற்பனையை அதிகரிப்பதற்கான வழி வகைகளைக் காட்டினார். ஒரு சமயம் நானே இதை பெல்ஜியத்தில் நேரில் கண்டிருக்கிறேன்.



''அவர் இந்தியாவுக்கு வந்த பிறகுதான் கம்யூனிஸ்ட் ஆக மாறினார். ஆயினும் ஜனநாயகம்தான் இந்தியாவுக்கு ஏற்றது என்று நம்பினார். ஜனநாயகத்தில் உள்ள குற்றம் குறைகளைத் தவிர்க்க வேண்டும் என விரும்பியவர்.

''பொதுக் கணக்குக் குழுத் தலைவராகத் திறம்படப் பணி புரிந்து வந்தவர்.

''இப்போது பம்பாயிலிருந்து நாள் தோறும் சுமார் 92 விமானங்கள் பறக்கின்றன. அது ஒரு சர்வதேச விமான நிலையமாக இருப்பதால் வெளி நாட்டவர்கள் பக்கத்தில் உள்ள டெல்லி, ஆக்ரா இந்த ஊர்களை மட்டும் பார்த்துத் திரும்பிவிடுகிறார்கள். சென்னை, கல்கத்தா ஆகியவற்றுக்கும் பம்பாய்க்குத் தரும் முக்கியத்துவம் கொடுத்தால் அந்த ஊர்களும் பலன் அடையும். டூரிஸ்ட் துறையும் வளர்ச்சி பெறும் என்ற தம் கருத்தை வலியுறுத்திச் சொன்னவர் பாஸு.''

—தமயந்தி

படம்: சுபா

# பியர்லெஸ் வேனிஷிங் க்ரீம் கொண்டு முத்தான மென்மையும் பட்டொளியும் பராமரியுங்கள்

இந்தியாவில் முதல் முறை அறிமுகம் —
உங்கள் சருமத்துடன் ஒன்றி விடக் கூடிய வானிஷிங் கிரீம்.

ஒரு துளி வானிஷிங் கிரீமை எடுத்து, அது எவ்வளவு எளிதில் விரிந்து பரவுகிறது என்பதைக் காணுங்கள். அதுமட்டுமல்ல, உங்கள் சருமத்தில் ஓர் ஒளியைத் தோற்றுவிக்கவும் செய்கிறது. அதுவே சரியானது.

பியர்லஸ் வானிஷிங் கிரீம் இன்றைய மற்ற வானிஷிங் கிரீம்களைப் போலல்லாமல் பிசு பிசு என்று ஒட்டிக் கொள்ளாமலிருக்கும். இயற்கை வழி முறைப்படியே உங்கள் சருமம் வேண்டிய அளவு ஈரப்பசையோடும் ஆரோக்கியத்துடனும் ஒளி விட்டுத் திகழ உதவுகிறது.

தயாரிப்பாளர்கள் :
**பியர்லெஸ் காஸ்மடிக்ஸ்**
தபால் பெட்டி எண் 2004
பெங்களூர் - 560020




**அழகுக் கலையின் ஆரம்பம் ...**
**பியர்லெஸ் வேனிஷிங் க்ரீம்**

KIRON/P/821

3

அந்தப் பெண் பேரெழில் கொண்டவளாய் விளங்கினாள். ஆனால் அது வித்தியாசமான அழகு. அவள் மேனி பால் நிறமோ சந்தன நிறமோ அல்ல. கண்டினால் சிவக்கிற உடம்பு அல்ல. கருமைதான். ஆனால் அந்தக் கருமையில் ஓர் ஆரோக்கியமான பளபளப்பு இருந்தது. காதளவு நீண்ட கயல் விழிகள் அவளுக்கு இல்லை. அகன்று ஏறத்தாழ வட்ட வடிவமாகவே இருந்தன. அவை குறுகுறுப்புடன் விஷமமாகச் சதா சிரித்தன. அவள் அதரங்களோ சற்றுப் பருத்தும் குவிந்தும் தாம்பூலம் தரித்ததால் நன்றாகச் சிவந்தும் காணப்பட்டன. அவள் மேனியின் எந்தப் பகுதியிலும் சதைப் பற்றுடன் கூடிய செழிப்புத் தென்படவில்லை. மாறாக வெய்யிலில் காய்ந்தும், மழையில் நனைந்தும் உரமேறிய உடல் என்று பார்த்த உடனேயே தெரிந்தது. ஒல்லியாகவும், உயரமாகவும் இருந்தாள். அவளுடைய கை, கால்கள் இரட்சியின்றி அழகாக நீண்டிருந்தன. இடையில் அவள் சுற்றியிருந்த ஒற்றைத் துணி கீழே முழங்கால் அளவே அவளை மறைத்தது. மேலே சிற்றிடை உயர்ந்து அளவான, உறுதியான மார்பகங்களைத் தழுவிப் பின்புறம் சென்

# ரவிகுல திலகன்

## செம்பியன்



றது. இடையில் ஒரு மான் தோலை இறுக்கிக் கட்டியிருந்தாள், பட்டையாக. அவள் கைகளை தந்தத்தினாலான வேலைப்பாடு மிக்க வளையல்களும் சிறு சங்குகளினாலான வங்கிகளும் அலங்கரித்தன. கழுத்திலே சில மணி மாலைகளின் இடையே ஒரு முத்துமாலை ஒளிர்ந்தது. புலி நகங்களைக் கோத்துக் கழுத்தோடு ஒட்டியது போல் அணிந்திருந்தாள். காதிலே மலருக்கு மலர் அலங்காரம் செய்தது போல் இரு பூக்கள். அளகபாரத்தை அவள் அலட்சியமாய் அள்ளிச் செருகியிருந்தாள், கொண்டையாக. மூக்கிலே நத்து வளையம் மினுமினுத்தது.

இத்தகைய ஒரு விசித்திர எழிலும் விநோத அலங்காரங்களும் பூண்டிருந்த அந்தப் பெண் பாறை உச்சியில் இருந்தவாறே கீழே நடப்பனவற்றைக் கவனித்தாள். வேட்டையாடி வந்த வீரனின் குதிரை தன் வேகத்தைக் கட்டுப்படுத்த முடியாமல் தவித்ததையும் பாறைச் சுவர் குறுக்கிடவே முன் கால்களை உயர்த்தியதையும் வீரன் தடுமாற காட்டுப் பன்றியானது ஆத்திரம் கொண்டு அவ்வீரன் மேல் பாய்ந்து அவன் மீதே விழுந்ததையும் அவள் பார்த்தாள். அருகிலிருந்த மரத்தில் பதுங்கியிருந்த ஒரு சிறுத்தை மெல்ல அசைந்து கொடுத்ததையும் அவள் கூரிய கண்கள் காணத் தவறவில்லை. ஒரு கணம் ஓட்டமாக ஓடி அந்த வீரனுக்கு உதவ வேண்டும் என்று அவளுக்குத் தோன்றியது. ஆனால் அவள் கால்கள் அசைய மறுத்தன. வைத்த கண் வாங்காமல் அந்தப் போராட்டத்தைப் பார்த்தபடி இருந்தாள். அந்த வீரன் தன்னுடைய உதவி இன்றியே அந்த யுத்தத்தில் வெல்வானா என்று பார்க்கிற ஓர் ஆவல் கட்டுக் கடங்காமல் எழுந்து அவளைச் செயல்பட விடாமல் தடுத்தது! அதே நேரத்தில் அவன் வெற்றிபெற வேண்டுமே என்ற கவலையும் விருப்பமும் உள்ளத்தில் பொங்கியது!



அவன் எதிர்பார்ப்பைப் பூர்த்தி செய்கிறவனாக விஜயாலயன் தன் இடையிலிருந்த குத்தீட்டியை அதன் உறையிலிருந்து உருவிப் பன்றியைக் குத்தி அப்பால் தள்ளிவிட்டு எழுந்தான். அதே சமயம் பரணி உடலைச் சிலிர்த்துக் கொண்டு கனைத்தது. அது ஆபத்தை உணர்த்துகிறது என்று புரிந்து கொண்டு அது என்ன என்று நாற்புறமும் திரும்பிப் பார்ப்பதற்குள் சிறுத்தை மரத்தின் மீதிருந்து அவன்மேல்பாய்ந்து கீழேயும் தள்ளி விட்டது. அவனை அடிப்பதற்காகத் தன் முன்னங்கால் ஒன்றினையும் உயர்த்தியது. அந்த அடிமட்டும் அவன் மீது விழுந்திருந்தால்... பத்துப் பேராகச் சேர்ந்து இரும்புத் தூண் ஒன்றைத் தூக்கி வந்து தாக்கியது போலிருந்திருக்கும். ஆனால் அதற்குள் அசாதாரண அறிவுக் கூர்மையுடைய பரணி தன் ஆண்டையைக் காக்க, சிறுத்தையைத் தன் முன்னங் கால்களை உயர்த்தி மிதித்தது. சிறுத்தையின் கவனம் திரும்பிய தருணத்தில் விஜயாலயன் மின்னலெனப் பாய்ந்து பன்றியின் உடலிலிருந்து குத்தீட்டியை விடுவித்துக் கொண்டான். தன்னைக் காத்த பரணியை இப்போது தான் காக்க முற்பட்டவனாக ஒரே தாவலில் சிறுத்தையின் மீது அதன் பின்புறத்திலிருந்து தாவிப் பற்றினான். கூடவே அவனுடைய குத்தீட்டி சிறுத்தையின் அடிவயிற்றைக் குத்திக் கிழித்தது. வேதனையுடன் பயங்கரமாக உறுமிய சிறுத்தை உருண்டு அவனைத் தனக்குக் கீழே சிறைப்படுத்தியது. அதன் பளுவிலிருந்து விஜயாலயன் தன்னை விடுவித்துக்கொள்ள முடியாமல் திணறினான். இன்னும் உயிர் துறக்காத சிறுத்தை மரண ஆவேசத்துடன் தன் பற்களை அவன் தோளில் பதித்தது. அதன் கூரிய நகங்கள் அவன் புஜங்களைக் கீறிக் காயப்படுத்தின. எரிச்சலும் வலியும் தாங்க முடியாமல் விஜயாலயன் பற்களை நறநற வென்று கடித்தான். 'தொலைந்தோம்! இன்றோடு நம் கதை முடிந்தது' என்று அவன் தீர்மானித்து விட்ட அதே சமயத்தில் அவன் சிறுத்தையின் முழு சுமையும் தன்மீது இறங்குவதையும் அதன் பிடி தளர்வதையும் உணர்ந்தான். குபீரென்று அதன் அடிவயிற்றில் பெருக்கெடுத்த குருதி அவன் உடம்பைச் சூடாக நனைத்தது.

தன்னை அழுத்துகின்ற ஒரு பெரிய பாறையை அப்புறப்படுத்துவதுபோல் மிகுந்த பிரயாசைப்பட்டுச் சிறுத்தையைத் தன் உடல் மீதிருந்து புரட்டி அப்பால் தள்ளினான் விஜயாலயன். அது இறுதியாக ஒரு தீனமான மரண ஒலியை எழுப்பிவிட்டு அடங்கியது. மெல்லத் தன் உடலை அசைத்துப் பார்த்தான் விஜயாலயன். 'நல்ல வேளை எலும்பு முறிவு ஏதுமில்லை' என்று எண்ணிக் கொண்டான். ஆனால் ஏகப்பட்ட இரத்தம் இழந்திருந்ததாலும், சோர்வினாலும் கண்களை இருட்டிக் கொண்டு வந்தது. மெல்ல நகர்ந்து மரத்தடியில் சாய்ந்து அமர்ந்தான். 'இதோ மயங்கிவிடப் போகிறேம்' என்று அவன் உணர்ந்த கட்டத்தில் சற்றுத் தொலைவில் அவன் சில ஓநாய்களைக் கண்டான். 'இந்த ஆபத்து ஒன்று மிச்சமிருந்ததாக்கும்' என்று அவன் விரக்தியுடன் நினைத்தான். 'எனக்கு ஒரு விரலைக்கூட அசைக்கச் சக்தி யில்லை. தினை வாடையையும் ரத்த வாடையையும் மோப்பம் பிடித்து வந்துள்ள இவை என்னைக் கடித்துக் குதறிப் போடப் போகின்றன. நல்லவேளை, இதோ நான் மூர்ச்சை அடைந்து விடப்போகிறேன். ஓநாய்களுக்கு இந்த உடல் இரையாகும்போது வலி தெரியாது! மயக்க நிலையிலேயே மரணமும் சம்பவித்துவிடும்! பரணி! நீயாவது தப்பித்துப் போ! பழையாறை சென்று இளவலுக்கு நேர்ந்த கதியை மன்னனுக்கு உணர்த்து!'

இதன் பிறகு ஒரே மையிருட்டுத்தான். பூரண அமைதிதான்.

**மீ**ண்டும்அவன் கண் விழித்தபோது தான் ஓலைக் கூரை வேய்ந்த ஒரு குடிசைக்குள் கயிற்றுக் கட்டிலில் படுத்திருப்பதை உணர்ந்தான். களிமண் சுவர்கள்தான் என்றாலும் அவற்றில் அழகான கோலங்களும் சித்திரங்களும் கலை ரசனையுடன் தீட்டப்பட்டிருந்தன. சாளரத்தின் வழியே காலை நேரப் பொன்னொளி அறையெங்கும் படர்ந்தது. சின்னக் குடிலானாலும் சுத்தமாகவும் வசதியாகவுமிருந்தது.

எழுந்திருக்க முயன்றபோது சுரீரென்று தோளிலே வலியை உணர்ந்தான். சட்டென்று அவனுக்கு நடந்தவையெல்லாம் ஞாபகம் வந்தது. 'என்னை ஓநாய்கள் தின்று ஏப்பம் விடாமல் காத்தது யார்? இங்கே எப்படி வந்து சேர்ந்தேன்?' என்று ஆச்சர்யமுற்றுச் சுற்றிலும் பார்வையை மறுபடி சுழல விட்டான். குடிலின் வாசல் கதவை நெருங்கியதும் பார்வை நிலைகுத்தி நின்றது! கதவு இலேசாகத் திறந்திருக்க அதன் வழியே ஓர் ஓநாய் இவனை ஆழ்ந்த யோசனையுடன் கூர்ந்து நோக்கியபடி அசையாது நின்றது! தன்மீது பாயத்தான் தருணம் பார்க்கிறது என்று தீர்மானித்த விஜயாலயன் தன்னிடம் ஆயுதம் ஏதும் இல்லையென்பதையும் இடுப்பைத் தடவிப் பார்த்து உணர்ந்தான். உடல் முழுதும் பல இடங்களில் கட்டுப் போட்டுப் போர்த்தி இருந்தது. பச்சிலைகளின் நெடி அவனைச் சூழ்ந்திருந்தது. 'ஓநாய்


ஹாங்காங் நகரில் குருடர்கள் மட்டும் பிச்சை எடுக்க அனுமதிக்கப் படுகின்றனர். மற்றவர்கள் பிச்சை எடுத்தால் தண்டனை உண்டு. -பி. நாராயணன்

தன்னை நெருங்குவதற்கு முன் மெல்ல நகர்ந்து தன்னைக் காத்துக்கொள்ள ஏதேனும் கம்பு, கழி கிடைக்குமா என்று பார்க்க வேண்டும். ஒன்றும் கிடைக்கவில்லையானால் இந்தக் கட்டிலையாவது புரட்டிக் கேடயம் போல் உயர்த்தி ஓநாயிடமிருந்து பாதுகாப்புத் தேட வேண்டும்.'

இவ்வாறு எண்ணி அவன் மெல்லக் கட்டிலை விட்டு இறங்கப் போனான்.

''அசையாதீர்கள்!'' என்று ஓர் ஆணை பிறக்க, படுத்தவாறே சிலையானான் விஜயாலயன். அவனுக்கு நினைவு தெரிந்த நாளாய் தாய், தந்தையரைத் தவிர யாருமே அவனை அதட்டியதில்லை. இதுவோ ஒரு பெண் குரல் வேறு!

திகைப்பும் வியப்பும் அடைந்தானென்றாலும் அவன் தலையை உயர்த்திப் பின்னால் குரல் வந்த திசையை நோக்கவில்லை. ஓநாயிடமிருந்து பார்வையை எடுக்கத் தயங்கியவனாக ''ஏன் அசையக் கூடாது? நான் நகர்ந்தால் இந்த ஓநாய் என்னைத் தாக்கும் என்பதாலா?'' என்று கேட்டான்.

'ஜல் ஜல்' என்று தண்டை ஒலிக்க அவள் அவனுக்கு முன்புறமாக வந்து நின்றாள். ''இந்த ஓநாய் உங்களைத் தாக்க வரவில்லை. காக்க வந்திருக்கிறது'' என்றாள்.

அவனுக்குத் தான் காண்பது கேட்பது எல்லாமே வியப்பளித்தன. ''என்ன சொன்னாய்! ஓநாயாவது என்னைக் காப்பாற்றுவதாவது?'' என்றான்.

''ஆமாம் இளவரசே!'' என்ற அவள் கட்டிலருகே தரையில் மண்டியிட்டு அமர்ந்து ''ஊ...ஊ...'' என்று சங்கேத ஒலிக்குறி எழுப்பினாள். உடனே அந்த ஓநாய் மகிழ்ச்சியாக ஓடிவந்து அவள் மடியில் தன் தலையைத் தாழ்த்திக் கொண்டது. அவள் அதன் முதுகைத் தட்டி வருடிக் கொடுக்க, கண் மூடி களித்தது.

ஓநாயை அவள் நாய் போலப் பழக்கி இருப்பதை விஜயாலயன் புரிந்துகொண்டான். நாட்டிலும் காட்டிலுமாக மாறி மாறி வாழும் நாடோடிக் கூட்டத்தைச் சேர்ந்தவள் அவள் என்பது அவளைப் பார்த்தாலே தெரிந்தது. இவர்கள் ஆடல் பாடல்களில் வல்லவர்களாக இருப்பார்கள். காளியை வழிபடுவார்கள். காட்டிலே கிடைக்கும் அபூர்வ மூலிகைகளைப் பற்றி நன்கு தெரிந்து வைத்திருப்பவர்கள். நாட்டுக்கு வரும்போது ஆடிப்பாடி மக்களை மகிழ்வித்து மூலிகைகளை விற்றுத் தங்களுக்கு வேண்டிய சில பண்டங்களை வாங்கிக் கொள்வார்கள். சில நாட்களிலேயே தங்களுக்குப் பிடித்தமான கானக வாழ்க்கைக்குத் திரும்பி விடுவார்கள்.

அவள் இலேசாகத் தலையை ஒடித்து அவனை ஓரக் கண்களால் சற்றே கர்வத்தோடு நோக்கினாள். ''பார்த்தீர்களா என் சமர்த்தை!'' என்று கேட்பது போல் இருந்தது அந்தப் பார்வை.

''ஒன்றும் செய்யாது இந்த ஓநாய் என்றால் எனக்கு ஏன் அசையக் கூடாது என்று உத்தரவு போட்டாய்?'' என்று கேட்டான்.

# அட்டைப்பட விளக்கம்

## ஆபீசுக்கு நேரமாச்சு!

'சமையலறைப் பதுமை'களாய் இருக்கத்தான் லாயக்கு என்று ஒதுக்கி வைத்த பெண்கள்தான் இப்போது எவ்வளவு முன்னேறி விட்டார்கள்! நாங்கள் யாருக்கும் இளைத்தவர்கள் இல்லை என்று வெளியிலும் பொறுப்பை எடுத்துக் கொண்டு விட்டார்கள். அதனால் சமையலறையிலும் பல மாற்றங்கள், சத்துள்ள உணவுகள், குக்கர், காஸ் என்று. இந்தப் பெண்மணி லக்ஷ்மி முரளி கூட அப்படித்தான் போலும். ஆபீசுக்குக் கிளம்பின கோலத்திலேயே சமையலறையில் இருக்கிறார். குக்கர் என்னவோ இருக்கிறது. நிமிஷமாய்ச் சமைத்துவிட்டு, பத்து மணிக்கெல்லாம் ஆபீஸ் அட்டெண்டன்ஸில் கையெழுத்து போட்டு விடுவார் போலிருக்கிறதே!

**மேலட்டை வண்ணப்படம்: எம். கே. ராமமூர்த்தி**

''நகர்ந்தால் வலிக்கப் போகிறதே என்பதால்தான். இன்னும் இரண்டு நாள் சென்றால் ரணங்கள் நன்றாக ஆறிவிடும்.''

''காட்டு ராணி! இந்த நாட்டு வீரனைக் காப்பாற்றியதற்கு நன்றி!'' என்றான்.

''உங்கள் நன்றியைப் பன்றிகளுக்குச் சொல்லுங்கள்!'' என்றாள் அவள் குறும்புடன். ''உங்கள் உடலை விடவும் பன்றி இறைச்சியே அதிக ருசி போலும்! ஓநாய்கள் உம்மை விட்டு விட்டுப் பன்றிகளைச் சுவைக்கப் போய்விட்டன!''

''உன் உத்தரவின் பேரில்தானே அவை அப்படி நடந்து கொண்டன! எனவே உனக்குத்தான் நன்றி கூற வேண்டும்! மேலும் என்னை இங்கு எப்படியோ கொண்டு வந்து சேர்த்து வைத்தியமும் செய்திருக்கிறாய் அல்லவா?''

''என்ன அப்படி எளிதாகச் சொல்லி விட்டீர்கள்!''

''பின் எப்படிச் சொல்ல வேண்டும்?''

'''உயிர்ப் பிச்சை அளித்தாய்; மறுபிறவி தந்தாய்; புத்துயிர் கொடுத்தாய்' என்றெல்லாம் கூறலாம்; மிகையாகாது! கொஞ்சமா கவா பட்டுக்கொண்டிருக்கிறீர்கள்! உங்கள் உடலில் காயங்கள் ஒவ்வொன்றுக்கும் மூலிகை மருந்திட்டுப் பச்சிலை வைத்துக் கட்டுவதற்குள் போதும் போதும் என்றாகி விட்டது. என்னதான் வீரர், முரடர் என்றெல்லாம் பெயரெடுத்திருந்தாலும் இத்தனை காயங்களா?''

அவனுக்கு வெட்கமாய் இருந்தது. எத்தனை இடங்களில், எந்தெந்த இடங்களில் இவள் என் உடலைத் தொட்டுத் தீண்டி ஔடதம் இட்டு....

அவன் சட்டென்று நினைவு வந்தவனாகத் தன் முகத்தின் வலப்புறத்தையும் தலையையும் தடவிப் பார்த்துக் கொண்டான். பார்வையற்ற தன் கண்ணையும் இதர தழும்புகளையும் மறைக்கும் தலைப் பாகையையோ துணிப் பட்டையையோ காணவில்லை.

தன்மீது காட்டுப் பன்றியும் செருக்கையும் பாய்ந்து காயப்படுத்தியபோது ஏற்பட்ட எரிச்சலைவிடப் பல மடங்காக மன எரிச்சலுற்றான்.

அச்சமயம் அந்தக் குடிலுக்குள் அந்த நாடோடி இனத்தைச் சேர்ந்த இன்னொரு பெண் கையில் மண்பாண்டம் ஒன்று ஏந்தி வந்தாள். அதை அவளிடமிருந்து வாங்கிச் சூடான கஞ்சியை மற்றொரு கலயத்தில் விட்டு ஆற்றினாள் இவள். பதமான சூட்டில் பாதி நிரம்பிய கலயத்தை அவன் வாயருகே கொண்டு போனாள். அவன் சற்றே நிமிர்ந்து பருக வசதியாகக் கழுத்துக்கு அடியில் கரம் கொடுத்து உடலை உயர்த்தித் தன் தோளிலே சாய்த்துக் கொண்டாள்.

'நான் அழகற்றவன் என்பதால் ஏற்பட்ட துணிவிலேதான் இவள் இவ்வளவு நெருங்கிப் பணிவிடைசெய்கிறாள். சுந்தர புருஷனாக இருந்தால் இப்படி உறவாடுவாளா? நாணத்துடன் ஒதுங்கி நிற்க மாட்டாளா?' என்று அவன் எண்ணினான்.

அவள் கரத்தை ஒதுக்கி, ''பெண்ணே! நான் இங்கு வந்து எத்தனைகாலமாயிற்று?'' என்றான்.

''இரண்டு நாட்கள்.''

''என்னது! இரண்டு தினங்களா?'' என்று பரபரப்புடன் எழ முயன்றான். ''பெண்ணே எனக்கு விடை கொடு! நான் போக வேண்டும்!''

அவள் சட்டென்று கலயத்தைப் பக்கத்தில் நின்ற பெண்ணிடம் தந்துவிட்டுத் தன் மெலிந்த கரங்களால் அவனைக் கட்டி அணைப்பது போல் பற்றி நிதானிக்கச் செய்தாள். எத்தனையோ மல்லாதி மல்லர்களின் மரணப் பிடிகளையெல்லாம் உடைத்தெறியும் வலிமை பெற்ற அவன் தன்னைச் சுற்றிக் கொள்கிற இந்தப் பூங்கொடியை விலக்க முடியாமல் தோல்வியுற்றான். அந்த அரவணைப்பு அவனுக்கு இதமாக இருந்தது; தேவையாகவும் இருந்தது. மனப் புண்ணுக்கு மூலிகை மருந்தாக விளங்கியது! அந்த ஆலிங்கனத்தில் ஒரு கரிசனத்தையும் அன்பையும் அவனால் உணர முடிந்தது. 'நான் எண்ணியது தவறு? இவள் என்னிடம் மெய்யன்பு பூண்டுதான் நெருங்கிப் பழகுகிறாளா?' இந்த உணர்வு ஒரு கணம் அவனைத் திடுக்கிடச் செய்ய, அவளை அவன் வியப்போடு பார்த்தான். அவர்கள் முகங்கள் ஒன்றையொன்று மிக மிக நெருங்கி யிருந்தன. அகன்ற அவள் கண்களின் இமைகள் கருநிறப் பட்டாம் பூச்சிகளின் இறகுகளைப் போலப் படபடத்தன. அதரங்களில் நாணப் புன்முறுவல் தோன்ற, கன்னங்கள் குவிய, அந்தக் கன்ன மலரில் இறங்கித் தேன் மாந்திக் கிறங்கும் பட்டாம்பூச்சியாக அவள் இமைகள் அமைதியுற்றன.

**ஒரு ஹிந்தி படம்;**
**ஒரு தமிழ்க்கதை**

திரைக்கதைகளுக்கும் இந்த இதழில் வெளியான சிறுகதைகளுக்கும் சம்பந்தம் ஏதும் இல்லை.

படங்கள் உதவி: சவன்

மெல்லப் பேசினாள் அவள்: ''இளவரசே! என்ன அவசரம்? உங்கள் பரணியைக் கண்டு பிடிக்க வேண்டுமா? அது இந்தக் குடிலுக்கு வெளியேதான் எங்களால் நன்கு பராமரிக்கப் பட்டு இப்போது ஆனந்தமாய்ப் புல் மேய்ந்து கொண்டிருக்கிறது. உங்கள் பரிவாரங்களைத் தேடிப் போக வேண்டுமா? அவர்களல்லவா உங்களைத் தேடி வரவேண்டும்? சோழப் பேரரசை ஸ்தாபிக்க வேண்டும் என்கிற உங்கள் கனவை நனவாக்க அவசரப்படுகிறீர்களா? அல்லது உத்தமசீலியைப் பழி வாங்கத் துடிக்கிறீர்களா? பிரபோ! எதற்கும் காலம் வரவேண்டாமா?''

அவன் திகைத்தான். ''பெண்ணே! உனக்கு எப்படி இதெல்லாம் தெரிந்தது? நினைவுமெல்லத் திரும்பும்போது நான் பிதற்றினேனா? அந்தப் பிதற்றல்களை என் உள்ளக் கிடக்கைகளென்று கண்டு கொண்டாயா?''

''மறுக்கவில்லை பிரபோ! ஆயின் ,எனக்கு மந்திர சக்தியும் உண்டு!''

அவன் கேலியாகச் சிரித்தான்.

''நம்பிக்கை இல்லையா?'' என்றாள் அவள். ''அப்படியானால் இந்த ஓநாய்களை எப்படி நான் வசியப்படுத்தி வைத்திருக்கிறேன்?''

''காட்டில் வாழ்ந்து அவற்றின் இயல்புகளை அறிந்து கொண்டிருப்பதால்!''

''உங்களைச் சோழ இளவரசர் என்று எப்படித் தெரிந்து கொண்டேன்?''

''என் தோற்றமும் முரட்டு சுபாவமும் உலகப் பிரசித்தி!''

'' 'உங்கள் காயங்களை இவ்வளவு சீக்கிரமாக ஆற்றுவது மூலிகைகள் மட்டுமல்ல, என் மந்திர சக்தியும்தான்' என்று நான் சொன்னாலும் நீங்கள் நம்பப் போவதில்லை.''

''சரியாகச் சொன்னாய்.''

''எவ்வளவு சீக்கிரமாகக் குணப்படுத்துவது என்றாலும் இன்னும் இரு தினங்களாவது ஆகும் பிரபோ! அதற்கு முன் பயணப்பட்டால் ரணங்கள் புரையோடிப் போகிற ஆபத்துண்டு. எனவேதான் ஓய்வாக இருக்குமாறு கெஞ்சுகிறேன்.''

நெகிழ்ந்தான். ''காட்டு ராணி! என்மீது இத்தனை அக்கறை கொண்டுள்ள உன் பெயரைக்கூட நான் இன்னும் கேட்டறியாத குற்ற உணர்வு என் நெஞ்சில் குறுகுறுக்கிறது!''

அவனை மேலும் இரு தினங்கள் தன்னுடன் இருத்திக் கொள்வதில் வெற்றி பெற்றுவிட்ட பெருமிதத்தோடு அவனை ஏறிட்டு நோக்கி அழகாக முறுவலித்து அவள் சொன்னாள்: ''குவளை.''

''குவளை! குவளை!'' அந்தப் பெயரைத் திரும்பத் திரும்பக் கூறி அந்த மலரின் பெயர் அவளுக்குப் பலவிதங்களிலும்பொருந்துவதை ஆராய்ச்சி செய்தவாறே அவளை வைத்த விழி வாங்காமல் பார்த்துக் கொண்டிருந்தான் விஜயாலயன்.

அப்போது குடிலுக்கு வெளியே திடீரென்று ஏதோ பெரிய கலவரம் மூண்டதற்கான ஒலிக் குறிகள் எழுந்தன. ''குவளை! ஆபத்து ஆபத்து!'' என்று ஒரு கரகரத்த ஆண்குரல் அனைத்துக் கூச்சல்களையும் அடக்கிக்கொண்டு மேலோங்கி ஒலித்தது. (தொடரும்)

திருத்தலம் கண்டேன்

# பெருமானின் காலடியில் பெருமன்னர்கள்

பாத்திமுத்து சித்தீக்

டெல்லியை 'கல்லறைகள் நிறைந்த ஊர் city of tombs' என்று வேடிக்கையாகக் குறிப்பிடுவதுண்டு. பல சமாதிகள் மீது சரித்திர முக்கியத்துவம் வாய்ந்த புராதனக் கட்டடங்கள் பலவற்றை டெல்லி சுல்தான்களும், மொகலாய மன்னர்களும் கட்டியிருக்கிறார்கள். அவற்றில் முக்கியமாகக் குறிப்பிடத்தக்கது ஹஜ்ரத் காஜா நிஜாமுத்தீன் அவுலியா மஹ்பூப் இலாஹி (யாரால் மனித இனமே பெருமைப்பட்டதோ) அவர்களின் தர்க்காவாகும்.

தென்னாட்டிலிருந்து டெல்லிக்கு வருகிறவர்கள் ஹஜ்ரத் நிஜாமுத்தீன் ரயில்வே ஜங்ஷனைத் தரிசித்துவிட்டுத்தான் டெல்லிக்குள் நுழைய முடியும். ஆனால் அந்தப் பெயரில் இருக்கும் புனிதத்துவத்தையோ மகத்துவத்தையோ அவர்கள் உணர்ந்திருக்க மாட்டார்கள். பழைய டெல்லியிலிருந்து தெற்கே மூன்று மைல்கள் தூரத்தில் அமைந்திருக்கும் இப் புண்ணியத் தலம் அறுநூற்றைம்பது வருடங்களுக்கு முன் அமைக்கப்பட்டது.

பொதுவாக எங்கள் உறவினர், நண்பர்கள், ஊர்க்காரர்கள் டெல்லி வந்தால் அவர்களுக்கு ஊர் சுற்றிக் காண்பிப்பது ஒரு வேலை. எங்கு போகிறோமோ இல்லையோ விருந்தினர் ஹஜ்ரத் நிஜாமுத்தீன் தர்காவுக்குப் போக வேண்டும்என்றால் அவர்களை உடனே அழைத்துச் செல்வேன். காரணம், நான் தரிசித்து வரும் ஒவ்வொரு முறையும் புதிய இடத்துக்குப் போய்ப் புதிதாகப் பார்க்கும் ஆவல் மனத்தை நிறைப்பதோடு அந்த மகானைப் பற்றிய பல புதிய தகவல்களும் கிடைக்கும்.

மெயின் கேட் அருகே ஒரு சிறிய குளம் போன்ற நீர்த் தேக்கம். அதைச் சுற்றி மொய்த்துக் கொண்டிருக்கிற மனிதர்கள். ஹஜ்ரத் நிஜாமுத்தீன் அவுலியாவால் கட்டப்பட்டதாம் இந்தக் குளம். அதிலுள்ள நீர் சகலவித பிணிகளுக்கும் அரு மருந்தாக இருந்து வருகிறதாம். அதோ ஹஜ்ரத் சாகிப் தம்முடைய அற்புத சக்தியைக் கொண்டு அந்தக் குளத்து நீரினாலேயே விளக்குகள் எரித்துக் காட்டியதாக அங்கிருந்த மௌல்வி ஒருவர் கூறியதும் மெய்சிலிர்த்து மேலே நடக்கிறோம்,

இங்கு நாள்தோறும் காலையும் மாலையும் நூற்றுக் கணக்கான ஏழைகளுக்கும், தர்காவில் தங்கியிருக்கும் விசுவாசிகளுக்கும் மார்க்கக் கல்வி பயிலும் மாணவர்களுக்கும் இலவச உணவுவழங்கப்படுகிறது. எந்த ஒரு ஜீவனும் வயிற்றுப் பசியோடு இந்த தர்காவில் தூங்கியதில்லையாம். ஹஜ்ரத் நிஜாமுத்தீன் அவுலியா காலத்தில் நகரத்தின் பெரும் பகுதிக்கே தினம் இலவச உணவு வழங்கப்பட்டதாம்!

அவுலியாவின் வாழ்நாளிலேயே பொருளுதவி செய்ய வந்த எத்தனையோ மன்னர்களை நிராகரித்து விட்டார்.... அடியார்கள் விசுவாசிகள், நண்பர்கள் அளித்த பொருளுதவிகளினாலும், அவுலியாவின் சக்தி மிக்க அருளாலும்தான் இவ்வளவு தூரம் வளர்ச்சியடைந்து இருக்கிறதாம். அது மட்டுமா?

சுல்தான் கியாஸுத்தீன் பால்பன், தலைமை நீதிபதிபதவிக்குக் கற்றறிந்தஅறிஞர் ஒருவரைத் தேடியபோது, மந்திரிகள் வாயிலாக ஹஜ்ரத் சாகிப் அவர்களின் மேதாவிலாசத்தை உணர்ந்து மனம் மகிழ்ந்து அப்பதவியை வழங்கியபோதும் மறுத்துவிட்டாராம். பெரிய கட்டடம் ஒன்றை மன்னர் அலாவுதீன் கில்ஜி கட்டிக் கொடுத்ததையும் கூட ஏற்றுக் கொள்ளவில்லையாம். அதன் பிறகு சுல்தான் அலாவுத்தீன் கில்ஜியின் மகன் கிஜாரி கான் அம்மாளிகைக்கு இரு புறமும் இன்னும் கொஞ்சம் கட்டடத்தை விரிவுபடுத்திக் கட்டி அதைப் பள்ளிவாசலாக மாற்றிக் கொடுத்தார் எனக் கேள்விப்பட்டு ஆச்சரியப்படுகிறோம்.

அந்தப் பள்ளிவாசலுக்கு எதிரேதான் ஹஜ்ரத் காஜா நிஜாமுத்தீன் அவுலியாவின் சமாதி ஒரு சிறு கட்டடத்துக்குள் இருக்கிறது. ஊதுபத்தி, பூமணம் சூழ, விசுவாசிகள் குர்-ஆன் ஆயத்துக்களை ஓதும் இனிமையை நம் செவிகள் நுகர, நம்மையறியாமல் ஒரு இறையச்சம் வெளிப்படுகிறது. ஆண்கள் மட்டுமே சமாதி இருக்கும் அறைக்குள் நுழையும் சம்பிரதாயம் இருப்பதால், பெண்கள் சுற்றுப் பகுதியில் இருந்து 'பாத்திஹா' ஓதுகிறார்கள்.

அவருடைய சமாதிக்குத் தெற்கே ஒரு சிறு கட்டிடத்தில் வேறு சில சமாதிகளும் உள்ளன. அதில் ஒன்று பேரரசர் ஷாஜஹானுடைய பிரியமுள்ள மகள் ஜஹானாரா பேகத்தினுடையதாம். அவள் உயிலின்படி இறந்த பின் ஹஜ்ரத் நிஜாமுத்தீன் அவுலியா காலடி இருக்கும் திசைப் பக்கம் அடக்கியிருக்கிறார்கள். இப்படிப் பல்வேறு மன்னர்களும் அடியார்களும் கடைசி விருப்பப்படி ஹஜ்ரத்காஜா நிஜாமுத்தீன் அவர்கள் காலடித்திசைப் பக்கம் உள்ள இடத்தில் இடம் இருந்தவரை அடக்கப் பட்டார்கள் என்று கேட்டபோது விசுவாசிகளின் அன்பின் ஆழம் எங்களை மெய்சிலிர்க்க வைத்தது.

டெல்லி மன்னர் முகமது ஷாவின் சமாதியும், மன்னர் பகதூர்ஷாவின் இரு சகோதரர்கள், மீர்ஜா ஜஹாங்கீர், மீர்ஜா பாபர் ஆகியவர்களின் சமாதியும் கூட அங்கேதான் இருக்கின்றன.

ஆன்மீக அறிவு பெற்ற ஹஜ்ரத் காஜா நிஜாமுத்தீன் அவுலியா மஹபூப் இலாஹி அவர்களுடைய மகத்துவத்துக்கு முன் மன்னாதி மன்னர்களின் மாண்புகள் எல்லாம் மங்கி நின்றன. ஆன்மீக கோலோச்சிய ஹஜ்ரத் காஜா நிஜாமுத்தீன் அவர்கள் உதிர்த்துச் சென்ற அறிவுரைகள், வாழ்ந்து காட்டிய நெறிமுறைகள், மனித இனத்துக்கு ஒரு வழிகாட்டும் கலங்கரை விளக்காக இருக்கிறது.

---

நண்டு கடித்தும் மனம் தளராத மகேந்திரன், பிடிவாதமாக மீண்டும் ஒரு தரமான படத்தையே அளித்திருக்கிறார்.

அயோக்கியக் கணவனால் கைவிடப்பட்ட கல்யாணி, அவளுடைய மக்கள், மூத்தாள் மகன் பட்டாபி, வீட்டில் குடியிருக்கும் தினு இவர்கள் வாழ்க்கைச் சம்பவங்களும் குழப்பங்களும், அவலங்களும்தான் மெட்டி.

பெண்களின் உணர்ச்சிகளை இவரைத் தவிர வேறு எவரும் இவ்வளவு சிறப்பாகக் கையாள முடியுமா என்ற கேள்வியை எழுப்பும் மகேந்திரன், நடிகர்களைச் சரியான வேலை வாங்கியிருக்கிறார். உதட்டுச் சுழிப்பிலும் முக பாவத்திலும், குரல் பிரயோகத்திலும் ஆயிரம் கதை சொல்லும் ராதிகா இத்தனை திறமைசாலியா என்ன? தோற்றத்திலும், பார்வையிலும் முரட்டுத்தனத்தை வெளிப்படுத்தும் சரத்பாபு, ஆச்சரியப்படுத்தும் செந்தாமரை, இன்னும் விஜயகுமாரி முதல் ஹாஜாஷெரீஃப்வரை அளவான நடிப்பால் கவர்கிறார்கள். குறைவான, ஆனால் ஆழம் நிறைந்த வசனங்களும், காட்சியமைப்புக்களும், பாடல் காட்சிகளும் Simply superb! கல்யாணி, பட்டாபிக்குத் தன் குடும்பத்தினரை அறிமுகப்படுத்துவது முதல் பட்டாபியைச் சுமந்த மோட்டார் சைக்கிள் படபடத்து அடங்கி நிற்பதுவரை.... படமே வெல்லப் பிள்ளையார்தான். எதைச் சொல்வது? எதை விடுவது?

இன்னொரு சக்தி அசோக்குமார். வெளிப்புறப் படப்பிடிப்பு மட்டுமின்றி, உட்புறத்திலும் கேமரா அழகாகக் கையாளப்பட்டிருக்கிறது. இருண்ட அறைகள், மெல்லிய ஒளி வீச்சுக்கள், அனாவசிய லைட்டிங் இல்லாததால் ஆயில் பெயிண்டிங்குகளை ஒத்த க்ளோசப்புகள் (குறிப்பாக ராதிகா) கவிதையாய் மிளிர்கின்றன. மனத்திலிருந்து நீங்கவே செய்யாத ஒரு காட்சி: கருக்கம் பாய்ந்து, மஞ்சள் பூசி, மெட்டி அணிந்த, உயிரற்ற இரு கால்கள் இறுக்கமான க்ளோசப்பில்; அருகில் கதறி அழும் ராதிகா, வடிவுக்கரசியின் Fade out ஆன முகங்கள்.... அடேயப்பா, இத்தனைக்கும் அந்தக் காட்சியின் சவுண்ட் ட்ராக்கில் கதறல் ஒலி இல்லை. பின்னணிப் பாடல்தான். (....''பாதம் பாடும் கீதம் யாவும் வான் மீதோ...மெட்டி ..மெட்டி'') பிழிந்து விட்டார்கள் மனத்தை.

பாடல் என்றவுடன் இளைய ராஜா. பாடல்களிலும் பின்னணியிலும் பரவி நிற்கும் மெளனிதான சோகமும், கம்பீரமான புதிய ரகுலும் (பிரம்மானந்தன்), புத்திசாலித்தனமான ரீரிகார்டிங்கும்... இவருக்கும் ஒரு ஷொட்டு!

தரத்தில் மகேந்திரனை வெல்ல மகேந்திரனால்தான் முடியும் போலிருக்கிறது. படத்துக்குப் படம் வளர்ந்தே வரும் இவருடைய அடுத்த மெட்டி ஒலிக்காகக் காத்திருக்கிறோம்.

சிந்து ஜீவா



# அன்றலர்ந்த பனிமலராய் உங்கள் அழகு சிரிக்கிறது...





செந்தாமரையான அழகு சிரித்திட
சொந்தமுடன் முகத்தில் பூசுவீர் லாக்டோ-காலமைன் ப்ளஸ்
புலரும் காலையில் பனித்துளி பட்டு
மலரும் பன்னீர்ப்பூவாய் மாறும் முகமெனும் மொட்டு
துவண்ட மேனியை அன்புடன் துடித்தெழச் செய்யும் அதிசயம்
உவமையில்லா லாக்டோ-காலமைன் ப்ளஸ்ஸின் ரகசியம்
அதன்... ஆலன்டைன் அளிக்குது இளமையின் மென்மை
வைட்டமின் ஈ வளமுடன் தருகுது பனித்துளியின் புதுமை
விட்ச்ஸ்ஹேஸல் எனும் அஸ்ட்ரின்ஜெண்ட் மேனியில்
செய்திடும் நன்மை.

இங்கிதமாய் பூசுவீர் லக்டோ-காலமைன் ப்ளஸ் அனுதினம்
மங்காத இளமை எழிலுக்கோர் வரப் பிரசாதம்.

## லாக்டோ-காலமைன் ப்ளஸ்

Xபோர்-இன்டர்:ப்ரான் லிட் (காஸ்மெடிக்ஸ் டிவிஷன்)

## மேனிக்கு அளிப்பீர் மென்னெழில்!

Sista's-DIL-693-81 ‖ Tam

இருட்டில் உள்ளே வந்தவன் இடம் பிடித்து உட்கார்ந்தான். சட்டென்று பெயர் சொல்ல முடியாத சில வாத்தியக் கருவி களின் கதம்பமான கர்ஜனை. ஓர் இடத்தில் மட்டும் வண்ண விளக்குகளின் குவியல்.

மதுவைப் போன்ற இளம் 'எக்ஸிகுடிவ்கள்' இரவு நேரப் பொழுதுபோக்குக்காக வரக் கூடிய இடம்!

அரங்கில் குவிக்கப்பட்டிருந்த செவப்பு வெளிச்சத்தில் பளிச்சென்று அவன் பார் வையைச் சுண்டி இழுத்தது ஒரு பெண்ணுரு வம். மின்னல் வெட்டும் வேகத்தில் முகத்தை வெட்டி வெட்டித் திரும்பியபடி ஆடினாள்: பாடினாள். என்ன பாட்டு! என்ன ஆட்டம்!

மது நிதானத்துக்கு வர முயன்று கொண் டிருந்தான். ஓட்டல் அறையில் அரை மயக் கத்தில் இருந்தவனை 'எண்டர்டைன்மெண்ட்' என்று ஆசை காட்டித் தரதரவென்று இந்த இடத்துக்கு இழுத்து வந்திருக்கிறான் ஆர். ஆர். ஹைதராபாத்தில் மதுவின் கம் பெனிக்கு அவன்தான் பிரதிநிதி.

அந்த இரட்டை நகரத்தில் தன்னுடையது விளம்பர ஏஜென்ஸியின் கிளையைத் திறப்பது பற்றி முடிவு செய்வதற்காக மது வந்திருந் தான். கொஞ்சம் மதுவை விழுங்கிவிட்டுத் தூங்கி எழுந்திருந்து காலையில் வேலையைக் கவனிக்க நினைத்திருந்தவனை ஆர். ஆர். விடவில்லை.

''புதிதாக, கொஞ்ச நாளாக, ஒரு பெண்...!'' என்று அவன் இழுத்தான்.

''பெண்ணா? இப்போது எதற்கு அந்தப் பேச்சு?'' என்று பார்வையினாலேயே மது கேட்டான்.

''அழகான பெண்... ஆட்ட பாட்டமெல் லாம் அருமை.... ஒரு விதத்தில் நம் தொழி லுக்குப் பயன்படுவாள்... மாடலிங்... மற்ற மற்ற விஷயங்கள்....!''

ஆர். ஆர். காட்டிய தொழில் பார்வை மதுவுக்குப் பிடித்திருந்தது. ஆனால் இவ் வளவு தாமதித்து அந்த இடத்துக்குப் போவ தில் அர்த்தமில்லையே என்று நினைத்தான். மறு விநாடியே மனத்துக்குள் சமாதானம்... 'ஆடல், பாடலைப் பார்க்கப் போவதில்லை; ஆளை மட்டும் பார்த்து விட்டு வரவேண்டியது தானே!'

இதோ வந்தாயிற்று.

மறுபடியும் அந்தப் பெண்ணின் மீது வெளிச்சம் கொட்டப்பட்டது. மது ஆக்கிர மிப்பைத் தொடுத்தான். நம்ப முடியாத வியப்பு.... பரபரப்பு. 'யார் இந்தப் பெண்? பார்த்த முகம் அல்லவா?'

சந்தேகப் பொறி தட்டியது. ஆர். ஆரிடம் முணு முணுப்பாகக் கேட்டான்.

''ரொம்ப அழகா இருக்காள் இல்லே?'' என்று அவன் திருப்பிக் கேட்டான்.

''அது சரி... இவ யார்? எந்தப் பக்கம்?''

தமிழ்நாட்டுப் பெண் என்றான். கொஞ்ச நாட்களாக இந்த விடுதியில் நிகழ்ச்சியை நடத்திக் கொண்டிருக்கிறாள் என்றான். அவள் வந்த பிறகு கூட்டம் இருந்து கொண் டிருப்பதாகச் சொன்னான்.

''இவ பேரு தெரியுமா?''

''மீரா!'' என்று பதில் வந்தது.

''மீராவா?'' என்றான் மிளகாயைக் கடித்த மாதிரி, நாடையை உயர்த்திக் கொண்டு.

''மீராவை முன்னாடியே உங்களுக்குத் தெரியுமா?''

ஆர். ஆர் கேட்ட கேள்விக்கு மது பதில் சொல்லாமல், அவளையே வெறித்துப் பார்த்தான். அவள் முகம், உடல், அங்க அசைவுகள், அவளுடைய குரல்... இன்னுமா சந்தேகம்? இல்லே... நான்கு வருஷங்களுக்கு முன்பு பார்த்த மாதிரியே இருக்கிறாள்.




அச்சுப் பிசாகமல், ஆனால் உடையில் மட்டுமே மாறுதல். அவளுக்குப் பொருந்தாத மாதிரி இருக்கிறது. தொழிலுக்குப் பொருத்தம்தான்!

'மீரா இந்த வழிக்கு எப்படி வந்தாள்?'

ஆர். ஆரிடம் மீண்டும் குறுக்குவிசாரணை. ஒன்றிரண்டை அவன் சொன்னான்.

''மீரா எங்கே தங்கியிருக்கா தெரியுமா?''

''தெரியாது. ஆனால் தெரிஞ்சுக்கிறதுஒண் ணும் கஷ்டம் இல்லே... விசாரிச்சிட்டு வரட்டுமா?''

வேண்டாம் என்று கையமர்த்தினான் மது.

ஆர். ஆருக்குப் புரிந்து விட்டது. 'அவள்மீது இவனுடைய கண் விழுந்து விட்டது! அடுத்த கேள்வி என்னவாக இருக்கும்?'

ஆர். ஆர். காத்திருந்தான்.

சரியாக நான்கு வருஷங்களுக்கு முன்னால் கல்லூரி ஃபைன் ஆர்ட்ஸ் கிளப் விழாக்களில் ஆடிப் பாடிக் கொண்டிருந்தாள் மீரா. மாணவர் பட்டாளம் அவளுக்குச் சூட்டிய செல்லப் பெயர், மிஸ் மாதவி!

கோவலன் இல்லாமல் மாதவியா? மது சிக்கிக் கொண்டான். அவ்வப்போது அவ

ஒரு ஹிந்தி படம் : ஒரு தமிழ்க்கதை:

ளுடன் அவன்தான் பேசக் கூடிய நிலையில் இருந்தான். 'ஸைப்'பின் செயலாளர். பெரிய இடத்துப் பையன். 'ரோமியோ'த்தனம் உண்டு.

ஒரு நாள் இசைவான, தனிமையான சூழ்நிலை கிடைத்தபோது அதிகப்படியான உரிமை எடுத்துக் கொண்டவன் போல் மீராவின் கையைப் பற்றினான் மது. இதை எதிர்பார்த்திராதவள் நடுநடுங்கிப் போனாள்.

''மது. என்ன இது?''

''கோபமா மீரா? இதிலே என்ன தப்பு?''



படம்: தும்மாரே பினு நடிப்பு: சுரேஷ் ஒபராய், சுவரூப் சம்பத்

''விடுங்க கையை!''

''மீரா, நிஜமாகவே கோபமா?''—அவன் பிடியை இறுக்கினான். விடுவித்துக் கொள்ள முயன்றாள். திடீரென்று ஆவேசம் வந்தவளாக அவன் கையை உதறித் தள்ளினாள்.

மதுவுக்கு அவமானம்... ஆத்திரம்.

''ஓ! பெரிய கண்ணகின்னு நெனைப்போ?''

''ஏன், இருக்கக் கூடாதா?''

''கலை, ஆட்ட பாட்டம், கூத்துன்னு வந்த பிறகு கண்ணகித்தனம் வேண்டியிருக்கோ?''

சுட்டெரிப்பது போல் அவனைப் பார்த்தாள் மீரா.

''நீ கையை உதறிட்டாலும், இன்னொரு முறை உன்னைப் பிடிக்கத்தான் போகிறேன். நான் நெனைச்சபடி செய்யத்தான் போறேன்.''

''தொட முடியாது... வீணா எதுக்குச் சவால் விடறீங்க?''

''சவாலே எடுத்துக்கறேன். சந்தர்ப்பம் வர்றப்ப உன்னைக் கவனிச்சிக்கிறேன்.''

மது அந்தச் சந்தர்ப்பத்தை எதிர்பார்த்துக் காத்திருந்தபோது ஓர் ஏமாற்றம். சில மாதங்களில் படிப்பை நிறுத்திவிட்டு வெளியூருக்குப் போய்விட்டாள் மீரா. அவள் அப்பாவுக்குக் கிடைத்திருந்த டிரான்ஸ்ஃபர் தான் காரணம்.

**நா**ன்கு வருஷங்கள் நழுவியிருக்கின்றன.

மது படிப்பை முடித்ததும் பொறுப்பு காத்திருந்தது. அப்பாவின் தொழிலான விளம்பர ஏஜன்ஸியில் எக்ஸிகுடிவ் நாற்காலியில் உட்கார்ந்திருந்தான். இரண்டொரு கிளைகளை ஏற்படுத்தி யிருக்கிறான்.

இன்னொரு கிளையைத் துவக்க வந்த இடத்தில், இதோ இப்பொழுது ஒரு சவாலைச் சந்திக்க வேண்டிய சந்தர்ப்பம் கிடைத்திருக்கிறது.

மதுவின் அனுபவத்தில் அவனைக் காகிதமாகக் கசக்கி வெகு தூரத்தில் வீசி எறிந்த ஒரே பெண் மீராதான். 'விட்டு விடக்கூடாது. மறுபடியும் அவள் கையைப் பிடித்து, தொட்டுக் கசக்கி முகர்ந்து வீச வேண்டும்... எக்ஸிகுடிவ் மிடுக்குடன் அவளைப் பார்த்துச் சிரிக்க வேண்டும்!'

மதுவின் உடம்பில் வெப்பம் ஏறுகிறது. 'இன்னும் கொஞ்சநேரம்தான். மீராவின் ஆட்டம் முடியப் போகிறது. நாலு வருஷங்களுக்கு முன் அவனை உதாசீனப்படுத்தியவள். அவன் வீசி எறியப் போகிற காகக்காகக் காலில் விழப் போகிறாள்... அது நடக்க வேண்டும்... ஆமாம், நடக்கப் போகிறது...'

எகத்தாளமான சிரிப்பு மதுவின் நெஞ்சுக்குள்! திடீரென்று ஒரு சந்தேகம். ஆர். ஆரிடம் கேகிகத்தான்.

''மிஸ்... மிஸ் மீராதான்!'' என்றான் ஆர்ஆர். 'நல்ல வேளை' அவள் யாருக்கும் இன்னும் பெண்டாட்டியாகவில்லை!'

''என் அட்ரஸ் வேணுமா?'' என்று ஆர். ஆர். கேட்டான்.

''வேண்டாம், நானே பார்த்துக்கறேன்.''

கடைசிக் கட்டம். வாத்தியக் கருவிகளின் கதம்பமான கர்ஜனை. மதுவுக்குப் புதிய பலமும் வேகமும் வந்து விட்டன.

எழுந்து போனான். மீராவுக்கு அருகில்... மிக அருகில்!

அவள் கையைப் பற்றி இழுத்தபோது திடுக்கிட்டுத் திரும்பினாள்.

''மீ ....ரா....!''

''நீங்களா?''

''கையை எடுக்கச் சொல்றியா? நான் இப்ப ஆடணும்....''

''நான் ஆடப் போறதில்லே!''

''அவ்வளவு பேரும் கலாட்டா பண்ணு வாங்க.... நான் கையை விடணும்னா ஒரு கண்டிஷன்... புரோகிராம் முடிஞ்சதும் தனியா வந்து என்னை நீ....நீ....''

சம்மதித்தாள்.

ஐந்து நிமிஷத்துக்குப் பிறகு அரங்கு காலியாகி விட்டது.

மீராவும் மதுவும் அருகருகே நின்றிருந் தார்கள். ஆர். ஆர். விலகி நின்றான்.

''மீரா! நாலு வருஷமா உன்னை வலை போட்டுத் தேடிக்கிட்டிருந்தேன். இப்ப நீயாவே அந்த வலைக்குள்ளே...''

அவள் கையைப் பற்றினான். மீரா எதிர்ப் புக் காட்டவில்லை.

''இப்ப ஆடிப் பாடி யார் யாருக்கோ விருந்துவைக்கிற நீ அன்னிக்கு என்னை உதறித் தள்ளினே இல்லே? கால வித்தியாசத்தைப் பார்த்தியா?'' என்றான்.

மீரா பேசவில்லை.

''உனக்காக அனுதாபப்படறேன், மீரா... பெண் புத்தி பின் புத்திங்கிறதை இப்ப நீ புரிஞ்சிருப்பே. பல பேருக்கு முன்னாலே ஆடிப் பாடிச் சம்பாதிக்கிறே இல்லே? அன்னிக்கு என் கையை உதறாமே இருந்தா ஆடாமலேயே உனக்கு அள்ளி அள்ளிக் குடுத்திருப்பேனே...! சரி... ஓட்டலுக்குப் போவோமா?''

''மது கையை விடுங்க!''

''ஓ! தாராளமாக!''

கையை விடுவித்துக் கொண்டவள் கைப் பையைத் திறந்து ஒரு உறையை எடுத்து நீட்டினாள்.

''என்னோட கல்யாணப் பத்திரிகை!''

''என்ன சொல்றே, மீரா?''

''நான் ஆடிப்பாடினாலும் நான் நெருப்புத் தான் என்பதைப் புரிஞ்சுக்கிட்ட ஒருத்தர் என்னைக் கல்யாணம் பண்ணிக்கப் போறார். இங்கேதான் டாக்டரா இருக்கார்!''

மது வாயடைத்து நின்றான்.

''மது! 'கண்ணகியா நீ!'ன்னு ஒரு நா கேட்டீங்க இல்லையா? அந்த வார்த்தைதான் இன்னை வரைக்கும் என்னை வழிநடத்திக் கிட்டிருக்கு. இன்னிக்கு நான் ஆடினதுதான் கடைசி ஆட்டம். இந்த நெருப்பை எந்த கறையானும் இதுவரைக்கும் அரிச்சதில்லே. முடிஞ்சா என் கல்யாணத்துக்கு வாங்க!''

மீரா போய்விட்டாள். தலை குனிந்து நின்ற மதுவிடம் நெருங்கினான் ஆர். ஆர்.



# புகை பிடிப்பதை நிறுத்த வேண்டுமா? சாப்பிடுங்கள் 'சூயிங்கம்'!

புகை பிடிக்கும் பழக்கத்தை நிறுத்தப் பல நாடுகளைச்சேர்ந்த டாக்டர்கள் பல யோசனை களைச் சில ஆண்டுகளாகவே கூறி வந்திருக் கின்றனர். ஆனால் தோல்வியே மிஞ்சுகிறது.

இப்பொழுது ரஷ்ய விஞ்ஞானிகள் இதற்கு ஓர் எளிய வழி ஒரு புதிய 'சூயிங்கம்' – கண்டுபிடித்திருக்கிறார்கள். சிகரெட் புகையில் உள்ள 'நிகோடின்' நச்சுக்கு மாற்று மருந்து அதில் கலக்கப்பட்டுள்ளது.

இந்தச் சூயிங்கம்மின் சுவை 'நிகோடின் சுவையைப் போலவே இருப்பதால் இது புகை பிடிப்பவர்களின் உடலை ஏமாற்றி விடுகிறது. இது உடல் முழுவதும் பரவி 'நிகோடி'னின் இடத்தைப் பிடுங்கிக் கொண்டு விடுகிறது. 'நிகோடி'னுக்குப் பதில் அதன் மாற்றுப் பொருளைப் பெறும் உடல் சிகரெட் பிடிக்கும் சபலத்திலிருந்து அமைதி பெற்றுவிடுகிறது. பிறகு சிகரெட் புகை யின் நெடியின் மீதே வெறுப்பு ஏற்பட்டு விடுகிறது.

மிகவும் விரிவான வைத்தியப் பரி சோதனைக்காக ஒரு லட்சத்துக்கும் மேலாக சூயிங்கம்கள் தயாரிக்கப்பட்டன. சிகரட்டை நிறுத்த இந்த சூயிங்கம் மிகவும் பயனுள்ளது என்பதை மேற்படி வைத்தியப் பரிசோதனை சந்தேகத்துக்கு இடமின்றி நிரூபிக்கின்றது.

ஆதாரம்: சோவியத் சிறப்புக் கட்டுரைகள்

-தகவல்: விஜயம்

புதிய
கோல்கேட் ஃப்ளோரிகார்ட் டூத்பேஸ்ட்












ஃப்ளோரிகார்டில் உள்ள எம்
எஃப்பி ஃப்ளோரைட் எனமலுடன் இணைந்து துவாரங்களுக்கும்,
சிதைவுக்கும் எதிராக உங்கள் பற்களை உறுதிப்படுத்துகிறது.

தமிழ்நாடு, கேரள மாநிலங்களிலும், கர்நாடகத்தில் குறிப்பிட்ட சில மார்க்கெட்டுகளிலும் இப்போது கிடைக்கும்.

CFT.G.3 TM

# எவ்வளவு தெரியும்? மருத்துவம் பற்றி

1. மனித உடலை முதன் முதலில் அறுத்துப் பார்த்துச் சோதனை செய்தவர் யார்?
(அ) ஹிப்பாக்ரடீஸ் (ஆ) ஹிரோ ஃபிலஸ் (இ) வில்லியம் ஹார்வி (ஈ) கிளாடியஸ் காலன்.

2. புகழ் மிக்க கிரேக்க தத்துவ ஞானியான இவர் மருத்துவத் துறையிலும் சிறந்து விளங்கினார்.
(அ) பிளாட்டோ (ஆ) ஹோமர் (இ) அரிஸ்டாட்டில் (ஈ) பெரிக்ளஸ்.

3. இரத்த ஓட்டத்தைப் பற்றிக் கண்டறிந்தவர் யார்?
(அ) அலக்ஸாண்டர் பிளமிங் (ஆ) எட்வர்ட் ஜென்னர் (இ) வில்லியம் ஹார்வி (ஈ) லூயி பாஸ்டியர்.

4. நகங்கள் என்பவை இறந்துபோன செல்கள்தான். இது எதனால் ஆனது?
(அ) கால்சியம் (ஆ) புரோட்டீன் (இ) பாஸ்பரஸ் (ஈ) கந்தகம்.

5. மிக அதிகமான எண்ணிக்கையில் பல் மருத்துவர்கள் உள்ள நாடு எது?
(அ) பிரான்ஸ் (ஆ) சீனா (இ) அமெரிக்கா (ஈ) சோவியத் யூனியன்.



6. படத்தில் உள்ள மருத்துவச் சின்னம் எந்தத் தேவதையோடு தொடர்புடையது?
(அ) மெர்க்குரி (ஆ) வீனஸ் (இ) ஜுபிடர் (ஈ) எஸ்குலாப்பியஸ்.

7. அனஸ்தீஸியா மயக்க முறையை அறுவை மருத்துவத்தில் முதன் முதலில் பயன்படுத்தியவர் யார்?
(அ) லூயி பாஸ்டர் (ஆ) வார்ட் விஸ்டர் (இ) கலீலியோ (ஈ) ரொனால்ட் ராஸ்.

8. வெறிநாய் கடிக்கு மருந்து தமிழ் நாட்டில் எங்கு தயாராகிறது?
(அ) கிண்டி (ஆ) கூனூர் (இ) சேலம் (ஈ) காரைக்குடி.

9. ஹிப்பாக்ரடீஸ் உறுதிமொழி என்று டாக்டர்கள் தொழில் செய்ய வரும் போது எடுத்துக் கொள்வார்கள். இவர் எந்த நூற்றாண்டில் வாழ்ந்தவர்?
(அ) கி.மு. 4ம் நூற்றாண்டு (ஆ) கி.பி. 2ம் நூற்றாண்டு (இ) கி.பி. 10ம் நூற்றாண்டு (ஈ) கி.மு. முதல் நூற்றாண்டு.

10. மனநோய்க்குக் காரணம் இந்தக் கிரகத்தின் கதிர்கள் என்று ஒரு கருத்து உண்டு.
(அ) செவ்வாய் (ஆ) சந்திரன் (இ) சனி (ஈ) புதன்.

அமைப்பு: 'யெஸ்பால்'

விடைகள்:

1. (ஆ) ஹிரோஃபிலஸ்.
2. (இ) அரிஸ்டாட்டில்
3. (இ) வில்லியம் ஹார்வி.
4. (ஆ) புரோட்டீன்.
5. (இ) அமெரிக்கா.
6. (ஈ) எஸ்குலாப்பியஸ் — பண்டைய ரோமானிய மருத்துவக் கடவுளான இவருடைய கைத்தடியே சின்னமாகியது.
7. (ஆ) வார்ட் விஸ்டர்.
8. (ஆ) கூனூர்.
9. (அ) கி.மு. 4ம் நூற்றாண்டு.
10. (ஆ) சந்திரன். Lunacy என்கிற சொல்லே அதன் காரணமாக வந்ததுதான்.

10ம் சரியானால் அற்புதம். 6 முதல் 9—அருமை. 3 முதல் 5 — மகிழ்ச்சி. அதற்குக் கீழே — சோகம்.

''வீட்டில் நீங்க மட்டுந்தான் இருக்கீங்களா?''
வீட்டுக்காரர்: ''ஆமாம்''
''துப்பாக்கி கூட சுவரில் மாட்டியிருக்கே உங்களுக்குச் சுடத் தெரியுமா?''
வீட்டுக்காரர்: ''தெரியாது. சும்மாதான் மாட்டி வெச்சிருக்கேன்.''
''அப்படியானா சரி, இருக்கற பணத்தை ஒழுங்கா எடு; இல்லே உதைச்சுப்பின்னிடுவேன்.''

— கீழை அ. கதிர்வேல் —



# 3

## எங்கிருந்து விழுந்தாலென்ன எழுந்தாக வேண்டுமே

சுலோசனா ரகுவின் அறையை விட்டு வேகத்தோடு விருட்டெனப் புறப்பட்டு விட்டாலும் அந்த வேகம் பஸ் ஸ்டாப் போகும் தூரத்தில் பாதி தூரம் கூட நீடிக்கவில்லை. காரணம், அதே வேகத்தில் போய் அடைய என்ன இலக்கு இருக்கிறது? அப்படியே இலக்கு இருந்தாலும் போய் ஆற்ற என்ன காரியம் இருக்கிறது?

மீண்டும் மனமும் நடையும் தளர்ந்து போக அவளுக்குத் தான் தன் எடை இழந்து சூனியத்தில் நடப்பது போலிருந்தது. இழப்பு! இழப்பு என்றால் எப்பேர்ப்பட்ட இழப்பு! எதை இழந்து வைத்திருக்கிறாள்! எவ்வளவு வேடிக்கையாகவும், விளையாட்டாகவும் இழந்து வைத்திருக்கிறாள்! எவ்வளவு மூர்க்கமாக இவன் ஏய்த்தும் நிராகரித்தும் விட்டான்! எவ்வளவு பெரிய காயம்! ஆறுமா இந்தக் காயம்?

ரோட்டின் இரு திசைகளிலும் பெரிதும் சிறிதுமான வாகனங்கள் அலறியடித்து ஓடிக் கொண்டிருந்தன. அவளுக்கு ஆச்சரியமாக இருந்தது. ஒரு மொத்தமான சமூக வாழ்க்கைக்கும் ஒரு தனி மனித வாழ்க்கைக்கும் இடையே உள்ள உறவானது புள்ளி, பூஜ்யம் பூஜ்யம் பூஜ்யம் என்று மூச்சு முட்டச் சொல்லிக்கொண்டே போகும்படி எவ்வளவு குறைந்த, கடலில் கரைத்த பெருங்காய விகிதத்தில் இருக்கிறது! இந்த நாற்பது லட்சம் ஜனத் தொகை கொண்ட நகரத்தில் தனக்குச் சம அளவில் உறவு கொண்டவர்கள் தனது குடும்பமும் இரண்டு மூன்று தோழிகளும் மட்டும்தானா? ஒருத்தி அல்லது ஒருவனின் அவலத்தைக் கண்டு, தானடா விட்டாலும் தன் சதையாடிப் போகிறவர்கள் ஒன்று அல்லது இரண்டு பேர்தானா? இங்கே, தான் அறுந்து தொங்கும் கழுத்தும், கொட்டும் குருதியுமாக வந்து கொண்டிருக்கும்போது ஒரு நாகரிகத்துக்காகவாவது ஒரு பேபி டாக்ஸி நின்று என்னம்மா சேதி என்று கேட்கவில்லையே! ஆனால் ஒரு முட்டாள் எருமை குறுக்கே வந்துவிடும்போது எப்படி இவை ஊர்வலமாய்ச் சட்சட்டென்று நின்று விடுகின்றன! எந்த விதிக்குத்தான் தன்னை ஒப்புக் கொடுத்து இந்த ஜன சமூகம் இயங்குகிறது? அவளுக்கு ஒரு நொடி சிரிப்பும் வந்தது. எப்படியொரு நேரத்தில் தனக்குத் தத்துவ விசாரம் தோன்றுகிறது!.

வெய்யில் மண்டையைப் பிளக்க அங்கே மனிதர்கள் 'பஸ் பஸ்' என்று தவம் செய்து கொண்டிருந்தார்கள். இவளும் போய் அவர்களுடன் நின்று கொண்டாள்.

எங்கே போகலாம்? வீட்டிற்கு? வேண்டாம். இப்போது வேண்டாம். முதலில் நளினியிடம் நடந்ததைச் சொல்ல வேண்டும். ஆனால் நளினி அலுவலகம் முடிந்தல்லவா வருவாள். இன்னும் மூன்று மணி நேரம் இருக்கிறதே! ஃபோன் செய்து அரை நாள் லீவு போட்டுவிட்டு வரச் சொல்லலாமா? அதுதான் சரி!

விசாரித்ததில் ஒரு அரை பர்லாங் இறக்கில் ஒரு பப்ளிக் பூத் இருப்பதாகச் சொன்னார்கள்.

''ஹலோ நளினி! நான் சுலோசனா பேசறேன்.''

''ஹாய், எங்க இருந்து பேசறே! ஆபீஸ்ல இருந்தா?''

''இல்லே அடையார்ல ஒரு பப்ளிக் பூத்ல இருந்து பேசறேன்''

''அடையாறு? யேய், பகல் ஒரு மணிக் கெல்லாம் தேவ தரிசனமா? ஆபீஸ் என்னாச்சு?''

''நளினி, இப்ப நீ ஒரு அரை நாள் லீவு போட முடியுமா?''

''லீவா? இப்ப ஆபீஸ்ல இன்ஸ்பெக்ஷன் போயிட்டிருக்கு. லீவுன்னு வார்த்தையைக் கேட்டாரோ, எங்க மானேஜர் தலையை வெட்டிடுவாரு ''

கொஞ்சம் தயங்கிய சுலோசனா பின் மெதுவாக, ''ம்... இங்கே தலை போயிடுச்சு'' என்றாள்.

இந்தக் குரல் நளினிக்கு விபத்தைத் தெரிவித்து விட்டது. அவள் பதற்றத்துடன், 'என்ன சுலோ, ஏன்ன சொல்றே what happened?'' என்றாள்.

''நீ லீவு போட்டுட்டு வா சொல்றேன்!''

''எங்கே வர?''

''ம்? உங்க வீட்டுக்கே வாயேன். உன் ரூம்லே வச்சுப் பேசுவோம்!''

''ஏன் உங்க வீடு பக்கமாச்சே? அலைச்சல் என்றா... மட்டும் போயிடுமே?''



''தலையாரி விட்ல ஒளிய வேண்டாம் நளினி!''

நளினி சில விநாடிகள் அனுமானித்துப் பார்த்துவிட்டு, ''ஓகே நீ அங்கே போயி இரு. நான் வந்துடுறேன்'' என்றாள்.

ரிஸீவரை வைத்ததும் அவளுக்கு இன்னொரு யோசனையும் தோன்றியது. ஒருவேளை இவனோடு பேசிவிட்டு வீடு திரும்ப நேர மாகுலும் ஆகலாம். ஒரு தோழி வீட்டுக்கு அவசியம் போய் வர நேர்ந்திருப்பதால், மாலை கொஞ்சம் லேட்டாகும் என்று வீட்டுக்குப் போன் செய்து விடலாமே?

வீட்டில் ரிஸீவரை அம்மா எடுத்தாள். பேசுவது இவளென்று தெரிந்ததும் அவளை நல்ல வேளையாக முந்திக் கொண்டு ''நீ எங்க இருந்து பேசறே?'' என்று கேட்டாள்.

''ஏம்மா?''

''ஆபீஸ்ல இல்லயாமே அண்ணன் வந்து பார்த்துட்டு வந்தான். அரை நாள் லீவு போட்டிருக்கியாமே?''

வெள்ளம் வீட்டுக்கும் போய்விட்டதா? கலோசனு ஒரு தாற்காலிக மண் அணையாக, 'ஆமாம்மா, ஒரு பிரண்டுக்குத் திடீர்னு ஒடம்பு சரியில்லே. அதுதான் லீவு போட்டேன். இப்பக்கூட இங்க இருந்துதான்...'' என்று இழுத்தாள்.

'இந்தாடி....' – குரல் நின்றது.

ஒரு நான்கு விநாடி இடைவெளிக்குப் பின் போனில் அக்காள் பேசினாள். அவள் போனை அம்மாவிடமிருந்து பிடுங்கியிருக்க வேண்டும். ''கலோசனு, நீ சீக்கிரம் வீட்டுக்கு வா!''

''சரிக்கா!'' ரிஸீவரை வைத்தாள்.




**எ**ல்லாம் ஒரே நாளில் சரிந்து கொட்ட ஆரம்பித்து விட்டது. அதுவும் சரிதான். கொட்டட்டும். கொட்டித் தீர்ந்து போகட்டும் மூழ்கப் போகிறோமோ, பிழைக்கப் போகிறோமோ ஏதாவதொன்று சீக்கிரம் வந்து விடுமே! சிறுகச் சிறுகச் சாக வேண்டாமே!

திடீரென்று அவளுள் ஒரு வீர்யம் விம்பு. இதை எதிர்கொண்டே ஆவது. என்ன செய்வதென்று தெரியவில்லைதான். ஆனால் முதல் வேலை நிமிர்ந்து நிற்பது.

அவள் இந்த டெலிபோன் பூத்துக்கு வந்த நடைக்கும் இப்போது திரும்பும் நடைக்கும் வேறுபாடு இருந்தது.

ஆனால், தானெல்லாம் எப்படி வினய மற்று, வெறும் மரமாய், வெள்ளைத் தாளாய் வளர்ந்து தொலைத்திருக்கிறோம் என்பது அவள் நளினி வீட்டுக் காம்பவுண்ட் கேட்டைத் திறந்ததும்தான் தெரிந்தது. இவள் என்னமோ முகத்தில் இருந்ததை யெல்லாம் துடைத்துப் போட்டுவிட்டு ராஜ நடை நடந்து வந்திருப்பதாக அவள் நினைத்துக் கொண்டிருக்க, இவளைப் பார்த்த மாத்திரத்திலேயே நிலையோரம் உட்கார்ந்து கொண்டிருந்த நளினியின் அம்மா பதறிவிட்டாள்.

''என்னம்மா? என்ன கலோசனு ஒடம்புக்கு என்ன?''

''ஒண்ணுமில்லியே மாமி?''

''என்னம்மா ஒண்ணுமில்லே, மொகம் பேயடிச்ச மாதிரி இருக்கு!''

பூ. இவ்வளவுதானா நான்!

அந்தம்மா மீண்டும் கேட்டாள். ''என்ன கலோசனு?''

இனி முழுக்க மறைக்க முடியாது. ஒரு பகுதியையாவது வெளியிடுவதே உசிதமென்று கலோசனு, ''ஒண்ணுமில்ல ஒரு சின்னப் பிரச்னை மாமி'' என்றாள்.

''என்ன பிரச்னை ஒனக்கெல்லாம் இன்னும் கல்யாணம் காட்சி முன்ன பின்ன ஒண்ணு பார்க்கல அதுக்குள்ள என்ன பிரச்னை வந்துடுச்சு? ஏதாச்சும் ஆபீஸ்லயா?''

''மாமி, நான் கொஞ்சம் நளினி ரூம்லே ரெஸ்ட் எடுத்துக்கவா?''

''ஓ, மகராசியா வா யாரு வேணாம்னு'' அந்த அம்மாள் முன் நடந்தாள்.

''கொஞ்ச நேரத்திலே நளினியும் வந்துடுவா மாமி!''

அந்தம்மாவுக்குக் கொஞ்சம் திக்கென்ற சந்தேகம், பிரச்னை இவள் மட்டில் சம்பந்தப்பட்டதா? அல்லது தன் மகளையும் இணைத்ததா? இருந்தாலும் நேரடியாகக் கேட்க முடியாதே! அதனால் ''அவ எப்படி ஆபீஸ் நேரத்தில இங்க வருவா'' என்று கேட்டாள்.

''வருவா நான் போன் பண்ணி வரச் சொல்லி யிருக்கேன்.''

அந்தம்மாவுக்கு நிம்மதியானது. 'இவள் தானே வரச் சொல்லி இருக்கிறாள்!'

**ந**ளினியின் அறை மாடியில் இருந்தது. கலோசனு பாதிப் படிகளில் இருந்தபோது அந்தம்மாள் 'காப்பி சாப்பிடறியா?''என்று கேட்டாள்.

''ம் இருந்தாக் கொடுங்களேன் மாமி''

சுலோசனு அந்தக் காப்பியைக் குடித்து முடிக்கு முன்பாகவே நளினி வந்து விட்டாள்.

''வா, நளினி உனக்கொரு நல்ல சேதி கொண்டாந்திருக்கேன்.''

ஆனல் நளினி இவளது வாய் வார்த்தை களை எடுத்துக் கொள்ளாமல் முகம் என்ன சொல்கிறது என்று பார்த்தாள்.

''என்ன செய்தின்னு கேளேன்.''

''சொல்லு'' — நளினி எதிரில் உட்கார்ந்தாள்.

''நீ ஒரு நாளு ரகுவப் பத்தி அபிப்பிராயம் சொல்றப்ப I am jealous of youனு சொன்னே ஞாபகம் இருக்கா?''

''ஆமா, சொல்லு?''

''பொறுமைப்படறது ஒரு கெட்ட குணம் இல்லியா? இனிமே நீ பொறுமைப்பட வேண்டியதில்லே நான்தான் பொறுமைப்படணும். உன் மேலே மட்டுமில்ல ரகுவைக் காதலிக்க நேராத அத்தனை பெண்கள் மேலேயும்!''

''நடந்ததைச் சொல்லு!''

''அவன் என் கழுத்தை அறுத்துட்டான்.''

நளினி எழுந்து போய்ப் படிகளில் அம்மா இல்லையே என்று பார்த்துவிட்டு வந்து யாரும் வந்தால் தெரிந்து விடுகிற மாதிரி அங்கேயே ஸ்டூலை இழுத்துப் போட்டு உட்கார்ந்து கொண்டாள்.

''என்ன நடந்தது சுலோ?''

''அவனுக்கு டென்னிஸ் விளையாட்டும் செக்ஸ் விளையாட்டும் ஒண்ணுதானும், கல்யாணம்கிறது முட்டன்களின் காரியமாம்! எந்தப் பொண்ணையும் அவனுல கல்யாணம் செய்துக்க முடியாதாம்!''

**''இதென்னங்க, ரெண்டு பன்னீர் செம்பு வெச்சிருக்கீங்க?''**

**''உஷ். பேசாமல் இருங்க. ஒரு பன்னீர் செம்பிலே வெறும் தண்ணீர்தான். முக்கியமான வங்களைத் தவிர மத்தவங்களுக்கு இந்தப் பன்னீர் செம்பைத் தான் தெளிப்போம்!''**

**திருமகன்**



''உன்னைக் கல்யாணம் செய்துக்க உறுதி கொடுத்ததா முன்னை சொன்னியே''

''ஆமா ஆனு அது அவன் தெரிஞ்சே கொடுத்த பொய் உறுதிமொழிதானும், அந்தப் பொய்யினுல அவன் மட்டும் சந்தோஷம் அடையாம நானும் சந்தோஷம் அடைஞ்சதுனுல அது பாபமில்லையாம்.''

நளினி அதிர்ச்சியில் பேசாமல் இருந்தாள். இவள் சொல்லிக் கொண்டே போனுள்.

''இந்தப் பிரச்னை இன்னிக்கு எப்படி ஆரம்பமாச்சு?''

இவள் தன் அக்காள் விஷயத்தைச் சொன்னுள். சொல்லி முடித்ததும் இருவரும் நீண்ட நேரம் பேசவில்லை.

சிறிது நேரத்தில் மேலே வந்த நளினியின் அம்மா ''என்னுங்கடி இப்பிடி ரெண்டு பேரும் எழவு வீட்ல ஆம்பிளைங்க உக்காந்த மாதிரி உக்காந்திருக்கீங்க'' என்று வியப்புத் தெரிவித்தாள்

''ஒண்ணுமில்லே அம்மா!''

''என்ன ஒண்ணுமில்லே! ஒண்ணுமில்லாததுக்கா இப்பிடி உக்காந்திருப்பாங்க? எதாச்சும் காதல் தோல்வி கிதல் தோல்வியா?''

யுவதிகள் இருவரும் விக்கித்துப் போய் விட்டார்கள். அம்மாவை நன்முக அறிந்து வைத்திருந்த நளினுவே இதை எதிர்பார்க்கவில்லை. அவள் கோபமாக, ''என்னம்மா ஒளர்ற, வாய்க்கி வந்தபடி? எதையாச்சும் பேசிட வேண்டியதுதானு? எதை வச்சு நீ இத அனுமானம் செய்தே'' என்று கேட்டாள்.

''என்னுடி.அனுமானம் வேண்டிக்கெடக்கு! அதுதான் சினிமாவில புட்டுப் புட்டுக் காட்டுருனே!''

எல்லாவற்றையும் மறந்துவிட்டு இவர்கள் வாய் விட்டுச் சிரித்து விட்டார்கள்.

''அதெல்லாம் ஒண்ணுமில்ல மாமி! இப்ப ஒங்களுக்கு விளக்கமாச் சொல்ற மூடில நான் இல்ல அதுதான் விஷயம்!''

''நான் வந்து சொல்றேன் போம்மா'' என்ருள் நளினி.

காப்பி டம்ளரை எடுத்துக் கொண்ட அம்மா, 'ஒனக்குக் காப்பி' என்று கேட்டாள்.

''வேண்டாம்! நான் அப்புறம் சாப்புடுறேன்.''

அம்மா கீழிறங்கிப் போனுள்.

''ம்.... அப்புறம் என்ன செய்யறதா இருக்கே சுலோ''

''அதை யோசிக்கத்தான் உன்னைக் கூப்புட்டேன்.''

அவர்கள் பல யோசனைகளை உற்பத்தி செய்து நிராகரித்தார்கள்.

முரட்டடியாகத் தனக்கு ரகு என்ற சைத்தானைத் தெரியவே தெரியாது என்று சாதித்து விடலாமா?

'செல்லையா இட்ட, காலேயில நானே ஒத்துக்கிட்டிருக்கேனே!''

''பரவாயில்லை, அவர் ஒருத்தர்தான். சமாளிச்சுக்கலாம்!''

கடைசியில் இதுவே முடிவாயிற்று. இந்த முடிவுக்கு வரப் பக்கத் துணையாக

# புத்துணர்ச்சிதரும் தூய சுவாசம்...
# உறுதிமிக்க, ஆரோக்கியமான பற்கள்



## அளித்திடுதே கோல்கேட் டென்டல் க்ரீம்

ஒவ்வொரு சாப்பாட்டிற்குப் பிறகும் கோல்கேட் கொண்டு உங்கள் பற்களைப் பிரஷ் செய்யுங்கள். உலகெங்கும் பல் டாக்டர்கள் சிபாரிசு செய்வதைப் போலவே அது உங்களைப் பாதுகாக்கிறது.

உங்கள் பற்களுக்கிடையே தங்கியுள்ள உணவுத் துணுக்குகளில் பாக்டீரியாக்கள் வளர்கின்றன. இவை வாய் துர்நாற்றத்தையும், பிறகு வலிமிக்க பற்சிதைவையும் உண்டாக்கும்.

எனவே சாப்பிட்டு முடித்தவுடனேயே கோல்கேட் முறையில் பற்களைப் பிரஷ் செய்யுங்கள். அது புத்துணர்ச்சியுடன் இனிய சுவாசத்தைத் தருவதற்கும், பற்களுக்கு வெண்மையளிப்பதற்கும், பற்சிதைவை எதிர்ப்பதற்கும் மிகவும் சக்தி வாய்ந்தது என்று நிரூபணமாகியுள்ளது.

**கோல்கேட்டின் புத்துணர்ச்சி தரும், பெப்பர்மின்ட் சுவை பல்துலக்குவதை ஒரு இன்ப அனுபவமாக்குகிறது.**

**நம்பகமான, கோல்கேட்டின் செயல் புரியும் முறை**



உணவுத் துணுக்குகள் பற்களுக்கிடையே சிக்கிக் கொள்வதால் துர்நாற்றத்தையும், பற்சிதைவையும் உண்டாக்கும் பாக்டீரியாக்கள் வளருகின்றன.



கோல்கேட்டின் ஒப்பற்ற, செயல்புரியும் நுரை ஆழ ஊடுருவிச் சென்று உபாதை தரும் உணவுத் துணுக்குகளையும் பாக்டீரியாக்களையும் அகற்றி விடுகிறது.



பலன்: கவர்ச்சிமிக்க வெண்மையான பற்கள், தன்னம்பிக்கை தரும் இனிய சுவாசம், பற்சிதைவுக்கெதிராகப் பாதுகாப்பு.

**கோல்கேட் டென்டல் க்ரீம்**
**உபயோகித்து வாய்துர்நாற்றத்தைத்**
**தடுத்திடுங்கள் பற்சிதைவை**
**எதிர்த்திடுங்கள்**




DC-G-74 TM

இருந்து ஊக்குவித்தது செல்லையா, ரகு இருவருமே சொல்லியிருந்த ஒரே விஷயம்.

'என்னம்மா இது! என் வயசுக்கு இது கூடத் தெரியாதா?ஒரு கன்னிப் பொண்ணைப் பார்த்து, நீ யாரு கூடவோ சுத்துனியாம் லாட்ஜுக்கெல்லாம் போறியாம்னு சொல்றேன் இது பொய்யா இருந்தா இந்நேரம் அவ தெறிச்சுப் போயிருக்க மாட்டாளா, எவன் சொன்னான், செருப்பால அடிக்கிறேன்னுகத்தியிருக்க மாட்டாளா?இப்பிடியா இல்ல... பொய் சார்னு அழுது வடிவான்!'

'இல்ல நேமி, இது ஒரு பொய்த் தோற்றம் நீ போயி, வீட்ல யாரு சொன்னான் எவன் சொன்னான், கொண்டா, அவனைச் செருப்பாலே அடிக்கிறேன்னு தலைய விரிச்சுப் போட்டுக்கிட்டு ஒரு ஆட்டம் ஆடு. நெருப்பெல்லாம் இருந்த எடம் தெரியாம பறந்து போயிடும்''

கலைவாசனு சொன்னான்: ''சரி நளினா! இன்னிக்கு நீ என்கூட வாயேன். என்ன இருந்தாலும் பயமாத்தான் இருக்கு!''

''வர்றதுல ஒண்ணுமில்லே கலோ. ஆனா நான் கூடவே வந்தா உங்க வீட்டாரோட வெளிப்பாடு முழுசா இருக்காது. நான் திரும்புற வரைக்கும் வெயிட் பண்ணி அப்புறம்தான் உன் மேலே பாய்வாங்க! என்ன பிரயோஜனம்? ஒண்ணு செய்வோம். நாம இப்ப ரெண்டு பேரும் போவோம். பஸ்ஸை விட்டு இறங்கினதும் நீ நேரே வீட்டுக்குப் போ. நான் லைப்ரரி போயிட்டு அரை மணி நேரம் கழிச்சு வரேன். என்னால ஒண்ணும் செய்ய முடியாட்டியும் அந்நியத்தில் ஒருத்தி வருகையினால நிகழ்ச்சியில ஒரு 'பிரேக்'னாலும் ஏற்படலாம்.''

''சரி வா ''

அவர்கள் கிளம்பினார்கள்

**வீ**ட்டில் அண்ணன் ரெங்கையா பம்பரமாய் நின்று 'உறங்கிக்' கொண்டிருந்தான். இந்த 'உறக்கமே' வீட்டில் மற்றவர்களைக் கிலி கொள்ளச் செய்திருந்தது. அவன் வந்து உட்கார்ந்த இந்த ஒரு மணி நேரத்தில் 'இக்க ராலனா' என்ற கேள்விக்குப் பிறகு, உட்கார்ந்தவன் இன்னும் கால் மாறிக்கூடப் போடவில்லை. அவன் முன்கோபக்காரன் தான். ஆனால் முன்கோபக்காரனை விடப் பத்திரமானவன் எவன் இருக்கிறான்? அவன் வந்த நிமிஷத்திலேயே கோபத்தைக் கொட்டிக் கவிழ்த்துவிட்டு அந்த நிமிஷமே சுவபமாகிவிடக் கூடியவன். ஆபத்தில்லாதவன் இவன் இப்போது குதித்து ஆர்ப்பாட்டம் செய்து 'வரட்டும் வெட்றன் பாரு, குத்றன் பாரு' என்று கத்திக் கொண்டிருந்தால் குறைந்தது விஷயஞானமுள்ள நாயனாவாவது ஓரளவு நிம்மதிப்பட்டிருப்பார். ஆனால் பம்பரம் உறங்குகிறது என்றால் வெளிக்கு அப்படி ஒரு மாயத் தோற்றம் காட்டிக் கொண்டு உள்ளே பூரித வேகத்தில் சுற்றுகிறது என்றல்லவா பொருள்? உண்மையில் அந்தப் பூரித சுழற்சிதானே இந்த உறக்கத்துக்குக் காரணம்? அவன் ஏன் அப்படி சூறாவளியாய்க் கொதித்துக் கொண்டிருந்தான்?

அவன் வந்த மரபு அப்படி. தங்கள் வீட்டுப்பெண்களின் துர்நடத்தை இவர்களின் ஆணி வேர் சல்லி வேரையெல்லாம் அலட்டிப் பார்த்துவிடுகிற ஒரு காரியம். மரணம் கூட இவர்களைக்கலக்குகிறஇரண்டாவது விஷயமே. இது இவர்களின் பாரம்பரிய குணம்சமாக ஒரு பிறப்பு உறுப்புப் போல் ஒட்டி ஒட்டி வந்திருந்தது.

இவன், பெண்கள் பள்ளி இறுதிக்கு மேல்படிக்கத் தேவையில்லை என்ற கொள்கையுடையவன். இவள் மீறிப் படித்துப் பட்டம் பெற்ற பிறகு வேலைக்குப் போக வேண்டாம் என்று சொன்னவன். பெண் சம்பாதித்துப் போட்டுத் தன் வயிறு கழுவுகிற மைத்துனன் எனக்கு வேண்டாம் என்று ஆடம்பரம் பேசியவன். ஒரு சப் இன்ஸ்பெக்டரான தன்னுடைய தங்கை ஒரு ஊருக்காகப் பணியாற்றுவது இவனைப் பல நேரங்களில் சங்கடப்படுத்துவதாக இருந்தது. இத்தனை நாள் அவள் அலுவலகம் பக்கமே முகம் திருப்பிப் பார்க்காதவன். அப்படிப்பட்டவன் காலையில்விஷயம் காதுக்கு வந்ததும் எல்லாவற்றையும் மறந்துவிட்டு, ஒரு கால் கடிதம் எழுதி மேஜையில் எறிந்துவிட்டுப் புறப்படு என்று சொல்ல நேரே போனான். ஆனால்...

கலைவாசனு வந்ததும் இவன் என்னதான் செய்வான்? ஒருவராலும் அனுமானிக்க முடியவில்லை. அம்மா இவன் கைத் துப்பாக்கியை ஏதும் கொண்டு வந்திருக்கிறானா என்றுகூடப் பார்த்துவிட்டாள். நல்ல வேளையாக இல்லை. (தொடரும்)

நீதிபதி: "குடித்துவிட்டுக் கார் ஓட்டினாயா?"

"ஆமாம்"

நீதிபதி: "குடிப்பதற்கு லைசென்ஸ் வைத்திருக்கிறாயா?"

"ஆமாம்"

நீதிபதி: "முதலில் ஏன் லைசென்ஸ் இல்லையென்றாய்?"

"காரோட்டத்தான் லைசென்ஸ் இல்லை!"

-சி. பி. ஜெயன்



2

ஒரு ஹிந்திப் படம்: ஒரு தமிழ்க் கதை

வையவன்

"ஜாய்...."

"ம்ம்..."

"ஏன் மௌனம்?"

"பயம்மா இருக்கு."

"என்ன பயம்?"

"அஸ்ஸாமுக்குப் போறீங்க. அங்கே கலகம் நடக்கிறதாமே.."

"பைத்தியம். இந்த ராஜுகிட்டே ஒரு தாயத்து இருக்கு. எதுவும் என்னை டச் பண்ண முடியாது. என்ன தாயத்து தெரியு மில்லே..."

குடை நிழலை விட்டு ஒதுங்கித் தன் நினைவு களில் புதைந்து போயிருந்த ஜாய்ஸைப் பார்க்கும்போது ராஜுவுக்கு நெஞ்சில் ஏதோ ஒரு வலி. பெற்றோரையும் ஊரையும் உற வினரையும் தனக்காகத் துறந்து விட்டு வந் திருக்கும் இந்தப் பெண்ணுக்கு லீவு முடிந்து தான் ராணுவப் பணிக்குத் திரும்பும் இந்த நேரத்தில் வருகிற பயம் இயற்கையானது தான்.

'பட்டாளத்துக்காரன் பிழைப்புக்கு என்ன சமாதானம் சொல்வது?'

தலைகுனிந்து நின்ற அவளை இழுத்து உட லோடு சேர அணைத்துக் கொண்டான் ராஜு. ஒரு புறாவின் உடம்பு நடுங்குவது போல ஜாய்ஸின் மென்மையான உடலில் ஒரு நடுக்கம்.

"என்ன தாயத்துன்னு நீ கேட்கவே இல் லியே...."

"நீங்க சொன்னாத்தானே?"

"இதோ இந்த உடம்பு.... இந்த வாசனை இந்த மென்மை... இந்த நினைப்பு... இந்த பயம்... இப்படி எனக்காகக் கவலைப்படற



நடிப்பு: ஜரீனு வஹாப் ராஜ் பாபர்

ஒருத்தி... இந்த நினைப்பே எனக்கு ஒரு தாயத்து...''

''அதோ மணி அடிச்சுட்டான்... இந்த மழையிலே அந்தப் பெட்டியிலே ஸீட் கிடைக்குமோ...'' ரயில் உடனே வந்தது.

''நீ இங்கேயே நில்லு... நான் அங்கே ஸீட் காலியான்னு பார்த்துட்டு வர்றேன்.''

அவன் சிறு நடையாகத் தொடங்கிச் சிறு ஓட்டமாக ஓடினான். கம்பீரமான ஓட்டம் பெரிய ஓட்டப் பந்தய வீரன் வைக்கிற ஸ்டெப்ஸ். மைதானத்தில் அவன் ஓட்டப் பந்தயத்துக்குப் பிராக்டீஸ் பண்ணுகிற அழகில் மனம் லயித்துப்போய்த்தான் ஜாய்ஸ் அவனை ஏற்றுக் கொண்டாள். ஓட்டப் பந்தயங்களில் அவன் வாங்கியிருக்கிற சர்ட்டிபிகேட்டுகள் ஒரு பெரிய கத்தை. அதைப் பார்த்துத்தான் ராணுவத்தில் கமிஷன் ஆபிசர் ராங்க் அவனுக்குக் கிடைத்தது.

ரயில் புறப்படும்போது வாடியிருந்த அவள் முகத்தை நிமிர்த்தி, ''யுவர் ரன்னர் ரன்ஸ் டு தி லோன்லி நைட்ஸ்... ஆறு ஒண்ணு...தேர் வில் பி நாட்டி ட்ரீம்ஸ்'' என்று கண் சிமிட்டினான். அவளால் சிரிக்காமல் இருக்க முடியவில்லை.

அதே ரயில்வே ஸ்டேஷன். அடுத்த வருஷம் டிசம்பர் மாதம். இப்போது ஜாய்ஸூம் அவளுடைய பெற்றோர்களும் நின்றுகொண்டிருக்கிறார்கள்.

''பார்த்து... மெள்ள... மெள்ள....'' ஜாய்ஸின் சகோதரன் மரியதாஸ் ஒரு சக்கர நாற்காலியை ஸ்டேஷன் பிளாட்பாரத்துக்குள் கொண்டுவரும் போர்ட்டரைப் பார்த்து மெதுவாகச் சொன்னான்.

அந்த நாற்காலியைப் பார்த்துவிட்டு மனம் வெடித்துப் போய், ''அம்மா'' என்று கத்தினாள் ஜாய்ஸ். அம்மா நெருங்கி வந்து அவளை இறுகத் தழுவிக் கொண்டாள்.

ஜீப்பில் போய்க் கொண்டிருக்கும்போது பாதையில் மண் சரிந்து முதுகில் ராஜூவுக்கு அடி. டிஸ்லொகேஷன் ஆஃப் ஸ்பைன் வித் பாரப்ளீஜியா... இடுப்புக்குக் கீழே உணர்வு இல்லை. இனி ஓட முடியாது. நாட்டில் மைதானம் மைதானமாக ஓடிய அந்தக் கால்கள் சக்கர நாற்காலியின் மேல் வைத்திருக்கும் இரும்புச் சட்டங்களில் உணர்வின்றிக் கிடக்கும். அந்தக் கம்பீரம், அந்த ஒயில், எல்லாம் போய் அவன் ரிடையராகி வீடு திரும்புகிறான்.

''ஏகவே....'' என்று மனம் வெடித்து வந்த குமுறலை மௌனமான கண்ணீராக வழிய விட்டவாறு சொன்னாள் ஜாய்ஸின் அம்மா:

''அவர் வந்ததும் அவரைப் பார்த்துக் கத்திக் கதறி ஆர்ப்பாட்டம் பண்ணிடாதே. ஏற்கனவே அவர் மனசு உடைஞ்சு வருவாரு. நீயும் கதறி அழுதா அவர் மனசு சின்னா பின்னமாயிடும்.''

தந்தையும் புத்திமதி சொன்னார்.

'தாயத்து இருக்கிறதாச் சொன்னீர்களே ராஜூ... இந்தத் தாயத்து அந்த நேரத்தில் எங்கே போயிற்று...' ஜாய்ஸின் மனம் அலறிற்று.

ரயில் வந்து நின்றது. ஜாய்ஸின் மைத்துனனும் தந்தையும் முன்னும் பின்னும் ஓடினார்கள்.

''ஜாய்....'' என்று ஒரு கம்பீர அழைப்பு கேட்டது. ஜன்னல் ஓரமிருந்து அவன் கையை ஆட்டினான். சக்கர நாற்காலி அருகே சென்றது.

சக்கர நாற்காலியில் உட்கார்ந்துகொண்டு முகம் பிரகாசிக்க மகிழ்ச்சியும் நம்பிக்கையும் கலந்த குரலில் அவன் சொன்னான்: ''பூஷ் தி சேர் ஜாய்ஸ்.''

அவள் தள்ளிக் கொண்டு வர எல்லோரும் பின்னே வந்தார்கள்.

''போன வாரம் ஒரு மிரகிள் நடந்தது.'' அதே புன்முறுவலுடன் அவளைப் பார்த்துச் சொன்னான். ''ஏய்... கிப் ஆஃப் தி லாங் ஃபேஸ்.... ரெண்டு ஸ்டெப் எடுத்து வச்சு நடந்தேன்....''

''ஈஸிட்....'' அவள் முகம் பளீரென்று ஒளி வீசிற்று. கத்தை கத்தையாக அவன் வைத்திருந்த ஓட்டப் பந்தய சர்ட்டிபிகேட்டுகளை யெல்லாம் விட அந்தச் சாதனையில் அவன் அடைந்த சந்தோஷம் பெரியது.

''எப்படி முடிஞ்சது தெரியுமா? நான் சொன்னேனில்லே தாயத்து...'' ராஜூ கழுத்துக்கு மேலே கையைக் கொண்டு வந்து சக்கர நாற்காலியைப் பிடித்திருந்த விரலைத் தொட்டான். என்ன இதம்!



தரகர்: உங்க தகுதிக்கு ஏற்ற விதத்திலே அந்த வக்கீல் வீட்டிலே உங்க பிள்ளைக்கு வரதட்சிணை பத்தாயிரம், நாற்பது பவுன் நகை, பாத்திரம் பண்டம்னு நீங்க கேட்ட எல்லாம் எந்தவித குறையும் இல்லாம கொடுக்கறேன்னு சொன்னாங்க.... ஏன் அந்தச் சம்பந்தம் வேண்டாம்னு சொல்றீங்க...?

அவர்: ''என் பெண்டாட்டிக்கு இருக்கிறமாதிரி அந்த வக்கீலோட சம்சாரத்துக்கு பிளட் பிரஷர், சுகர் கம்ப்ளெண்ட் எதுவும் இல்லாதது எங்க அந்தஸ்துக்கு ஒத்துவரலேயே!'' -ச. கமல தியாகராஜன்

உங்கள் கேசம் அடர்த்தியின்றி சக்தியின்றி இருக்கிறதா? உங்கள் கேசத்தைப் பக்குவப்படுத்தி அழகையும் ஆரோக்கியத்தையும் அளிக்கிறது...






செழுமையான புரதப்போஷாக்கு நிறைந்த

## ஹேலோ எக் ஷாம்பூ

ஊட்டம் குறைந்த நிலையில் உங்கள் கேசம் அடர்த்தியின்றியும், சக்தியின்றியும், ஆரோக்கியமின்றியும் காணப்படுகிறது.

பட்டுப்போன்ற, பொன் நிறமுள்ள வழவழப்பான ஹேலோ எக் ஷாம்பூ செழுமையான புரத ஊட்டம் நிறைந்த உத்தியின் மூலம் உங்கள் கேசத்தை சீராகப் படியவைத்து அதற்குத் தேவையான எல்லா ஊட்டங்களையும் அளிக்கிறது. உங்கள் கேசம் அழகாக ஆரோக்கியமாக, அடர்த்தியாகத் திகழ்கிறது.

ஹேலோ எக் ஷாம்பூவின் செழுமையான நுரைவளம் உங்கள் கேசத்தில் புகுந்து அதை பொலிவுடனும் தூய்மையான பளபளப்புடனும் திகழச் செய்கிறது.

**ஹேலோ எக் ஷாம்பூ...**

**அழகிய அடர்த்தியான ஆரோக்கியமான கேசத்திற்கு**

HES. G. 4. TH

டயலாக்:

# கறிகாய் மார்க்கெட்

"எடு....எடு...கத்திரி...ஆத்தூர் கத்திரி இரண்டு ரூபா கிலோ... இந்தாங்க... கத்திரிக் காய் வெண்ணெய் மாதிரி இருக்கும்...."

"சொல்லிக் கொடப்பா...அப்புறம் என்ன விலே?"

"அதான் ஒரே விலே சொல்லிட்டேனே. இரண்டு ரூபா... நீ ஒரு வெலே கேளு... கட்டுப்படியானுல் கொடுக்கறேன்.. இல்லா கட்டி இல்லேன்னு சொல்லிப்புடறேன்."

"ஏய் கூடை... இப்படி நடு வழியிலே குந்திக்கினு இருக்கியே... லாரி எப்படிப் போவும்?"

"யாரய்யா மாட்டைத் தொறந்தறது... அழுகின தக்காளியை ஒரு ஓரமாப் போட மாட்டாங்க... இந்த ஜனங்களுக்கு எப்பத் தான் தெரியப்போகுதோ!"

"கொத்தமல்லி எப்படி?"

"பத்துப் பைசாவுக்கு ரெண்டு கட்டு."

"என்னது? அநியாயமா இருக்குதே.... கொள்ளே வெலே சொல்றியே. மூணு கட்டுக் கொடு."

"ஆமா(ம்). இதிலே கொள்ளே லாபம் சம்பாரிச்சு மைலாப்பூர்லே ஆடு கட்டிப் புடுவேன். போ....ஸார்.... பினாக்லே சினிமா டிக்கட் வாங்க யோசிக்க மாட்டீங்க.. இங்கே கொத்தமல்லிக்காரிகிட்ட பேரம் பேசுவீங்க."

"காயைப் பாருங்க... இவ்வளவு பெரிசு இரண்டு ரூபாய்க்கு யாராவது கொடுத்தா எனக்குக் காக வேணும்... சாதாரணக் காய் இல்லே இது. தேன்காய்."

"தேன்காயோ தேங்காயோ அழுகல் இல்லாமல் இருக்குமா?"

"நீ எடுத்துட்டுப் போங்க. ஒயாரண்டி நானு."

"பச்சைப் பட்டாணி எப்படி விலே?"

"எவ்ளோ வாங்கப் போறே?"

"அதை முதல்லே சொன்னத்தான் வெலே யைச் சொல்லுவியா?"

"நீ கேப்பே நூறு கிராம். எனக்குக் கட்டுப் படியாவணுமில்லே? கிலோ ஆறு ரூபாய்."

"என்னது ஆறு ரூபாயா? பெங்களூர்லே மூணு ரூபாய்க்கு மிதிபடறது."

"இருக்கும்... அன்னடம் நீ பெங்களூர் போய்க் கறிகாய் வாங்கியாந்து துன்னு... ஏம்பா, நாகலிங்கம், பெங்களூருக்கு ரயில் சார்ஜ் எவ்வளவு? இருபத்தஞ்சு ரூபாயா?.... இதெல்லாம் சேட்மாருங்க வாங்கறதுங்க.. நீங்க எதுக்கு அனுவிசயமா வெலேயைக் கேக்க றீங்க!"

"என்னங்க, இன்னிக்காவது உருளைக் கிழங்கு கிடைக்குமா?"

"அட நீ ஒன்னு ராயபுரம் சைடிங்கிலே வாகின் கிடக்குது. ஐநூறு மூட்டை அசல் பஞ்சாப் கிழங்கு. நேத்தே டெலிவரி தந்துட றேன்னு சொன்னுங்க. இத்தனைக்கும் இரு பத்து அஞ்சி அழுக்கியிருக்கேன்.... எப்படியும் ராவிக்கு லாரியிலே கொண்டாந்து இறக் கிடுவேன். ஆமாம், வெங்காயம் என்னரேட்?"

"ஆயிரத்து இருநூறு வாக்கிலே இருக் குது."

"அதுக்கு வந்த வாழ்வைப் பாரேன். போன மாசம் எழுநூத்துக்கு மிதிபட்டது."

"யோவ்...யாரம்மே... பலாப்பழக் கடை இங்கே போடறது... முதல்லே உன் கூடை யைத் தூக்கு...."

"என்ன அபூர்வமா இந்த மார்க்கெட் டுக்கு வந்திருக்கேன்?"

"நாளைக்குத் துவாதசியோ இல்லேயோ? வுடத்தாவலே...? ஏய்...மொக்கை பையா... இந்த மூட்டையை ரவை பிடிச்சி இறக்கி வுடு..."

"எவண்டா இவன் தக்காளி மேலே இறக்கப் பாக்கறே... கஸ்மாலம்..."

"புடலங்காய் எடுங்க... ஒரு ரூபாய்தான். எடுங்க... உங்க கையாலே போணியாவட்டும்!"

"முக்கால் ரூபாய் கொடுப்பியா?"

"ஒரு ரூபாய் மேனிக்கு அம்பது காய் வித்தாச்சு... முக்கால் ரூபாய்க்குக் கேக் கிறியே"

"போணின்னு சொன்னியேப்பா..."

"அண்ணே அந்த அரைக் கிலோ கல்லைக் கொடேன். எடை போட்டுட்டுத் தந் துடறேன்."

"பத்து ரூபாய்க்கு ஏது சாமி சில்லறை? கறிவேப்பிலே வியாபாரம் பண்றேனு பாங்கு தொறந்து வச்சிக்கிட்டு இருக்கேனு?"

"என்ன முதலாளி, வெளியிலே வாரி திக்குது. இரண்டு மூட்டை வள்ளிக் கிழங்கு இறக்கட்டுமா?"

"நல்லா சைஸா இருக்கா? பொடிக் கிழங்கு போமாட்டேங்குதுப்பா!"

"என்னப்பா அவ்வளவு கரெக்டா தங்கம் நிறுக்கிறப்பலே நிறுக்கறே. இரண்டு காய் போடு....பத்தையாகப் பணம் வாங்கிக் கிறியே. இந்த நாட்டு அவரைக் காய்க்கு... போடு... ரெண்டு கொசுறு போடு."

"போட்டாச்சம்மா... கிலோவுக்கு அஞ்சு பைசா நிக்காது... அம்மா... அம்மா... சும்மா எடுத்துப் போட்டுக்காதே. கொசுறே அம்பது கிராம் எடுத்துக்கிட்டியே."

"ஏய் பச்சை முளகாய்... கடை போட ஓ'டு வாங்கி இருக்கியா.. எடு ஒரு ரூபாய்...

''இது என்ன ஸார் நாயம்... உள்ற பூந்தா நான் பார்க்க முடியும்? இஸ்டமிருந்தா வாங்கு இல்லாட்டி நவுந்துக்கிட்டே இரு.''

ந்தது நிச்சயமாயிருந்தா.

''வளியிலே நின்னுட்டு என்னங்க பேச்சு... ரூட்டை எடுத்துட்டுப் போறவனுக்கு வழி

மை....

''எடு பீன்ஸ் ஒரு ரூபாய்... எடு பீன்ஸ ஒரு ரூபாய்.... எடு....''

அகஸ்தியன்

பாருங்க ஒரு ஆள் உயரம் இருக்கு புடலங்கா!

எடு.. எடு.. ஆத்தூர் கத்திரிக்கா... வெண்ணெ கத்திரிக்கா...

கொத்தமல்லி கொள்ளை விலை சொல்றியே!

ஆமா.. இதிலே கொள்ளை லாபம் சம்பாரிச்சு மாளிகையில பங்களா கட்டப்போறேன்!

கறிவேப்பிலை வாங்கிட்டு பத்து ரூபாய நீட்டறியே..

நூறு ரூபா நோட்டு இல்லையா..?

வாங்கியாச்சா?

எங்கே வாங்கறது?

படம்: பாயல் கீ ஜங்கார் தயாரிப்பு: சோகல்

# தன்னை மறந்தாள் தலைப்பட்டாள்

எம்.ஏ. சுசீலா

"மிகச் சிறிய எறும்பின் காலில் நுண்ணிய சலங்கையைக் கட்டி ஒலிக்க விட்டால் கூடப் பரமன் காதில் கேட்கும்."

—கபீர்தாசர்

துளசி பரபரப்புடன் இயங்கிக் கொண் டிருக்கிருள். ஆயிற்று. இன்னும் ஒரு 'மணி நேரம் கழிந்தால், அந்த பஜனைக் கூடம், பக்தர்களின் வருகையால் நிரம்பத் தொடங்கி விடும். சலவைக் கற்கள் பதித்த.

3

ஒரு ஹிந்தி படம்
ஒரு தமிழ் கதை:

வட்ட வடிவில் அமைந்த, விசாலமான அந்தப் பளிங்குக் கூடத்தைப் பெருக்கி, இரண்டு முறைக்கு மேல் நீரூற்றிக் கழுவி விட்டுத் தரை உலர்ந்த பின் இரத்தினக் கம்பளங்களை விரித்து வைக்கிறாள். அங்கே நடுநாயகமாய்க் கொலு வீற்றிருக்கும் குழலூதும் கண்ணனின் பளிங்குச் சிலையைப் பார்த்துப் பார்த்துத் துடைத்த பின், மறையும் மாலைக் கதிரவனின் பொன்னொளியில் அது வெள்ளியாய் மின்னுவதை எட்ட நின்று ரசித்துக் கைகொட்டிஅனுபவிக்கிறாள். பூஜைக்கான மலர்களை இரண்டு மூன்று கூடைகளில் நிரப்பி விட்டுப் பஜனைக்கான இசைக் கருவிகளை உள்ளறையிலிருந்து கொண்டு வந்து வரிசையில் அடுக்கி வைக்கிறாள்.

எல்லாம் முடிந்த பின் கடைசியாகத் துவாரகாநாத்தின் பொற் சதங்கைகளை, இரு கரங்களிலும் பயபக்தியுடன் ஏந்தி வந்து விக்கிரகப் பீடத்தின் அடியில் வைக்கும் போது ஒரு கணம், அவள் கண்களில் அசாதாரண ஒளி மின்னலிடுகிறது. வழக்கமாக அந்தச் சதங்கைகளை ஸ்பரிசிக்கும் போதெல்லாம் அவள் மனத்தின் மூலையில் எட்டிப் பார்க்கும் அந்த ஆசை, இன்றும் நிழலாய்த் தலை நீட்டுகிறது. மெள்ளக் காதருகே ஒரு சதங்கையைக் கொண்டுபோய் ஆட்டிப் பார்க்கிறாள். அதன் சுநாதத்தில் அவள் மேனி சிலிர்த்துப் போகிறது. தன்னிச்சையாக அவள் கரங்கள், மற்றொரு சதங்கையையும் செவியருகே கொண்டு போகின்றன. நாதம்...! நாதம்....! நாதம்! வெறியேற்றும் அந்த நாதத்தில் பித்துற்றுப் போனவளாய்ச் சுற்று முற்றும் பார்த்து யாரும் இல்லை என்பதை உறுதிப்படுத்திக் கொண்ட பின், சதங்கைகளைத் தன் கால்களில் கட்டிக் கொண்டு ஆடத் தயாராய் எழுந்து நிற்கிறாள்.

துவாரகாநாத்தின் இல்லத்தில் அடைக்கலம் புகுந்திருக்கும் ஓர் அநாதைப் பெண் துளசி.

துவாரகாநாத்... அந்த வட்டாரத்தின் பெருந்தனக்காரர் என்பதோடு தீவிரமான கிருஷ்ண பக்தர் என்றும் பெயரெடுத்தவர். கிருஷ்ண பஜனை விரிவாக நடத்த வேண்டும் என்றே, தம் வீட்டுத் தோட்டத்தில் ஒரு லட்ச ரூபாய் செலவில் பளிங்குக் கூடம் ஒன்றை நிர்மாணித்திருப்பவர். வாரந்தோறும் சனிக் கிழமை இரவுகளில் அங்கே பஜனைக் கோஷ்டியினர் முழங்கும் ஜயதேவர் அஷ்டபதிகளும், புரந்தரதாஸர் கிருதி மீரா பஜன்களும் கூடியுள்ள மக்களைப் பரவச நிலைக்கு இட்டுச் செல்லும். பூஜை முடியும் வேளையில் இரட்டை நாடியான தம் பருத்த சரீரத்தைத் தூக்க மாட்டாமல் தூக்கியபடி கால்களில் கட்டிய சதங்கையுடன் கண்களை மூடிக் கொண்டு ''ஸ்ரீ கிருஷ்ண கோவிந்த ஹரே முராரே''பாடியபடி குதித்துக் குதித்து துவாரகாநாத் பஜனை செய்கையில் பார்ப்பவர்கள் சிலிர்த்துப் போய்க் கோஷங்கள் எழுப்பிக் கண்ணீர் மல்கி நிற்பார்கள். பூஜை முடிந்ததும் நிவேதனமாகப் படைக்கப்பட்ட நெய் வடியும் சர்க்கரைப் பொங்கலைப் பிரசாதமாய்ப் பெற்றுக் கொண்டு திருப்தியுடன் திரும்பும் கூட்டம், துவாரகாநாத்தின் பக்தி பூர்வமான ஆட்டத்தைச் சிலாகித்தபடி கலைந்து செல்லும்.

பக்தி நாட்டம் ஒருபுறம் இருந்தாலும் சில விஷயங்களில் மிகவும் கண்டிப்பானவர் துவாரகாநாத். குறிப்பாகப் பூஜைக் கூடத்தின் தூய்மையிலும், அதைப் பிற காரியங்களுக்குப் பயன்படுத்தக் கூடாதென்பதிலும் அவருக்கு அக்கறை அதிகம் உண்டு. பூஜை மாடத்தைத் தயார் செய்யும் வேலை, பணிப் பெண் துளசிக்கு ஒதுக்கப்பட்டிருந்தபோதும் எல்லாவற்றையும் எடுத்து வைத்து விட்டுக் கால் மணி முன்னதாகவே அவள் ஒதுங்கிப் போய்விட வேண்டும். பூஜை தொடங்கி முடியும்வரை வீட்டுப் பெண்கள் கூட வெறும் பார்வையாளர்களாகத்தான் இருக்கலாமே தவிரப் பஜனையில் கலந்துகொண்டு அவர்கள் பாடுவதிலும், ஆடுவதிலும் அவருக்குச் சம்மதம் இருந்ததில்லை. எல்லாவற்றுக்கும் மேலாக அந்தப் பொற் சதங்கைகளின் மீது அவருக்கு இருந்த மோகம் அதீதமானதென்றே கூற வேண்டும். இது வரை அவற்றைத் தொடுவதற்கோ, கையாள்வதற்கோ அவர் வீட்டுக் குழந்தைகளுக்குக் கூட அனுமதி கிடைத்ததில்லை.

அந்தச் சதங்கைகளை அணிந்துகொண்டு தான் துளசி அப்போது ஆடிக் கொண்டிருக்கிறாள். யாருமில்லாத அந்தக் கூடம்



''அமெரிக்காவில் இருக்கிற உங்கள் மருமகப் பிள்ளை, பெரிய தமிழ் எழுத்தாளர்களின் நாவல்களை வாங்கி அனுப்பச் சொல்லி உங்களுக்கு அடிக்கடி செலவு வைப்பாரே! அதை எப்படிச் சமாளித்தீர்கள்?''

''கடைசியா நான் எழுதின நாவலின் ஒரு பிரதியை அனுப்பிவைத்தேன். அவ்வளவுதான்! புத்தகம் படிக்கிற பழக்கத்தையே விட்டுட்டேன்; இனிமேல் எதையும் அனுப்பாதீங்கன்னு கடிதம் போட்டுட்டாரு.''

-ராஜராஜன்

முழுவதிலும் ஓரிடத்தில் நிலைக்காமல் சுழன்று சுழன்று வந்து அவள் பாதங்கள் நர்த்தனம் புரிகின்றன. 'பாண்டுரங்கா! பண்டரிநாதா!' —இந்த இரண்டு சொற்களை மட்டுமே உச்சரிக்கப் பயின்றிருந்த அந்தப் பேதை, அதையே திரும்பத் திரும்பப் பாடியவளாய் ஆடுகிறாள். கட்டுப்படுத்த இயலாத, பார்வையாளர் யாருமற்ற அந்த ஆனந்த தாண்டவத்தின் சாட்சியாகக் கண்ணனை மட்டும் மனத்தில் நிறுத்திக் கால் பதித்து மெய்மறந்து ஆடுகிறாள் அவள்.

காலப் பிரக்ஞையோ, தாளப் பிரக்ஞையோ, இல்லாத அந்த ஆட்டம், அவள் கால்கள் தாமாய்த் துவண்டு, தொய்ந்து, சோர்ந்து போகும்வரை நீடித்துக் கொண்டே போகிறது.

அங்கே பூஜைக் கூடத்தின் வெளியே பஜனைக்கு வந்த கூட்டம் ஸ்தம்பித்து நின்றிருக்க, நடுவே வைத்த விழி வாங்காமல் துவாரகாநாத்!

நிலைக்கு வந்த தேர் போல் ஆடி நிறுத்திய துளசி, உள்ளம் பதற, உடல் நடுங்க, விழிநீர் பெருகக் கால் சதங்கைகளைக் கழற்றிக் கண்ணன் காலடியில் வைத்து விட்டு உள்ளே ஓடுகிறாள்.

பஜனை தொடங்குகிறது. வழக்கமான கலகலப்பின்றி, இயந்திரத்தனமாய்ப் பெயருக்கு நடந்து முடிகிறது. பாடல்கள் இசைக்கப்பட்டதும், துவாரகாநாத், பொற் சதங்கைகளைப் பூட்டிக் கொண்டு ஆடாமல் பிரசாதத்தை மட்டும் விநியோகித்துப் பூஜையை நிறைவு செய்கிறார்.

பிரளயத்துக்கு முன் நிலவும் அமைதியே போல், அந்தப் பெரிய கூடத்தின் மத்தியில் அவர் மட்டும் மௌனமாய் அமர்ந்திருக்க நிமிடங்கள், நிதானமாய் ஊர்கின்றன. நிசப்தத்தைக் கிழித்துக் கொண்டு அவரது வெண்கலக் குரல் கர்ஜிக்கிறது.

''துளசி... துளசி...''

எந்த விநாடியும் அழைப்பை எதிர்பார்த்திருந்த துளசி, ஓடிவந்து அவர் பாதங்களில் விழுந்து கதறி அழுகிறாள். ஆழ்ந்த நிதானத்துடன் ஒலிக்கிறது அவர் குரல்.

''துளசி! நீ ஏம்மா அழறே? நீ ஒரு தப்பும் செய்யலே! கண்ணைத் துடை!''

அவள் விக்கித்துப் போனவளாய், வியப்புடன் விழிகளை உயர்த்த, அவர் புன்னகைத்த வண்ணம், எழுந்து சென்று அந்தச் சதங்கைகளை எடுத்து வருகிறார்.

''இத்தனை நாள் இதைக் கட்டி நானும் ஆடியிருக்கேன். நான், பக்தியிலே என்னை மறந்து ஆடறதா ஊரார் சொன்னாங்க! அந்த வார்த்தை எனக்கும் கேட்டது! அது.., இன்னும் உரக்கக் கேட்கணும்கிறதுக்காகவே அந்தப் புகழ் போதையிலே இன்னும் வேகமா ஆடினேன்! வெறியோட ஆடினேன்! நான் நான்னு என்னை நினைச்சேதான் ஆடியிருக்கேன்! என்னை மறந்து ஒரு நிமிஷம்கூட லயிச்சதில்லே! ஆனா நீ! இன்னிக்கு உன் ஆட்டத்திலே கண்ணனுக்கும் உனக்கும் மட்டும்தான் இடம் இருந்ததுன்னு சொல்றது கூடச் சரியில்லே! உனக்குக் கூட அங்கே இடமில்லே! இனிமேல் இந்தச் சதங்கைகளைக் கட்டி இங்கே ஆடற தகுதி, உனக்கு மட்டுந்தான் உண்டு! இந்தா பிடியம்மா!''

அந்தக் கோடீசுவரர் குழந்தையாகிக் கொஞ்சும் குரலுடன் சதங்கைகளை அவளிடம் நீட்டுகிறார். அவள் கண்ணில் சுடர் விடும் ஒளியுடன் அவற்றைப்பெறக் கையேந்தி நிற்கிறாள். இந்தக் காட்சியை எட்டிப் பார்த்துக் குறும்புப் புன்னகை செய்கிறான், சிலை வடிவிலிருந்த துவாரகை நாதன்!




### எந்தப் போரில் உடைந்தது?

மதுரை சென்ட்ரல் பஸ் ஸ்டாண்டிற்கு அருகிலுள்ள வீரபாண்டிய கட்டபொம்மன் சிலையின் கையிலிருக்கும் வாள் கடந்த ஐந்தாண்டு காலமாக உடைந்த நிலையிலேயே காணப்படுகிறது. இவ்வாள் சீர் செய்யப்பட வேண்டுமென்று மாவட்ட ஆட்சித் தலைவரிடம் பன்முறை எடுத்தியம்பியும் இதுவரை சீர் செய்யப்படாமலேயே உள்ளது. இனிமேலாவது அரசு அதிகாரிகள் இதைக்கவனித்து இவ்வாளைச் சீர் செய்வார்களா?

-திசைமுத்து

புகைப்படம்: வி. மோகன்

# நினைவெல்லாம் நித்யா



கதை: அபர்ணா நாயுடு
சித்திரம்:


















போலீஸ்! இவங்களுக்கு யார் தகவல் கொடுத்தது?


அந்த ஆளைப் பிடிச்சு நிறுத்து. ஓடிப் போறான்...


நான் நிதானமா இருக்கணும். தேவையானதை மட்டும் தான் சொல்லணும். என்னோட முடிவு- நித்யாவோட மரணத்துக்குக் காரணமானவனை நானே கண்டு பிடிச்சுப் பழி வாங்கணும்...


யார் மேன் நீ? உன் பேரென்ன?
ரமேஷ். காமர்ஸ் காலேஜிலே லெக்சரரா இருக்கேன்.


என்யா! காலேஜிலே லெக்சரர்னு சொல்கிறே... இங்கே ஒரு கொலை செஞ்சிருக்கியே!
தொடரும்

ஒரு ஹிந்தி படம்; ஒரு தமிழ்க்கதை

# பாக்ஸ் ஆபீஸ்

4

படம்: பாயல் கி ஜங்கார்

நடிப்பு: கோமல்

ஜுஹுவில் ஒரு பங்களா;
காண்ட்லாவில் ஒரு
காட்டேஜ்;
ஒரு மெர்ஸிடீஸ் கார்;
பூனாவில்... ஒரு ஃபார்ம்;

லேகா ஹிந்திப் படத்தில் நடிப்பதற்கு முன்பே ஹிந்தி நடிகையானால் என்ன பிரிஸ்டீஜ் சிம்பல்கள் வேண்டும் என்பதை மனப்பாடம்செய்து வைத்திருந்தாள்!

ஏற்கனவே ஹிந்திப் பட உலகில் கொடி கட்டிப் பறந்த பிரபல ஹீரோயினின் பெயரைப் போலவே தன் பெயரும் இருந்ததால் என்றாவது ஒரு நாள்தானும்அங்கே நுழைந்து விடலாம் என்கிற நம்பிக்கையும் அவளுக்கு இருந்தது.

லேகாவுக்கு அந்த ஆசை திடீரென்று ஏற்பட்டதல்ல. மனசுக்குள்ளேயே அந்தரங்கமாக அதைப் பற்றி அவள் அடிக்கடி நினைத்துப் பார்த்துக் கொள்வதுண்டு.

தன் தாய் பத்மாட்சியிடம் அதை வாய் விட்டுச் சொன்னால், "சும்மா இரு பாப்பா. உனக்கு ஏன் இந்த வேண்டாத விசாரம் அதெல்லாம் நடக்குமா?" என்று அடக்கி விடப் போகிறாளே என்கிற பயத்தில் பேசாமல் இருந்து விட்டாள்.

அதுவும் பிரபல தமிழ் நடிகர் ஒருவர் ஒரே ஹிந்திப் படத்தில் நடித்துவிட்டு 'ஓஹோ' என்று புகழை வாரிக் கொண்டு பம்பாய்ப் பட உலகையே ஒரு கலக்குக் கலக்கிக் கொண்டிருப்பதைப் பார்த்ததும் அந்தஆசை மினிசைஸிலிருந்து பெரியஅகர அளவுக்கு வளர்ந்து விட்டது.

தற்போது தமிழ்ப் படங்களில் அவளுக்குச் சுமாரான வாய்ப்புகள் கிடைத்துக் கொண்டுதான் இருந்தன. ஆனால் பம்பாய்க்குப் போனால் பணத்தை வாரிக் கொட்டலாம். அதில் ஒரு படம் ஹிட் ஆகிவிட்டால் போதும் தயாரிப்பாளர்கள் விழுந்தடித்துக் கொண்டு வந்து அவள் வீட்டு வாசலில் 'க்யூ'வில் நின்றுவிட மாட்டார்களா? அப்புறம் என.

அதற்காக அவள் திட்டமிட்டு ஹிந்தி எழுதப் படிக்கக் கற்றுக் கொண்டாள்.

"உனக்குத் தமிழே சரியாக வரலியே இன்னும் ஹிந்தி எதுக்கு பாப்பா?" என்று பத்மாட்சி கேட்டதற்கு "ஹிந்தி நம்மதேசிய மொழியம்மா" என்று மழுப்பினாள் லேகா.

கத்தக் நடனத்தில் தனக்கு ஆர்வம் இருப்பதாகச் சொல்லி அதற்கும் ஒரு ஆசிரியரை நியமித்துக் கொண்டாள்.

"கழுத்தை இப்படி வெட்டும்மா... அப்படி ஒடியம்மா" என்று அவர் அவளைப் பம்பரமாகச் சுழல வைத்தபோது தன் கழுத்து எங்கே நிஜமாகவே ஒடிந்து விடுமோ என்று அவள் சங்கடப்பட்டாலும் தன்னுடையலட்சியத்தை அடைய அது உதவக் கூடும் என்று பொறுமையுடன் கற்றுக் கொண்டாள்.

அவளுடைய அபிலாஷை நிறைவேறும் சந்தர்ப்பமும் வந்தது.

அவள் தமிழில் நடித்து வெளியான "மாந்தோப்பு மங்காத்தா" என்கிற திரைப் படம் ஓடு ஓடென்று ஓடி நூறு நாட்களை வேகமாக ஜம்ப் செய்து கொண்டு மறுபடியும் வெற்றி நடை போட்டது.

அதையே ஹிந்தியில் எடுப்பதாகப் பேச்சு அடிபட்டபோது டைரக்டர் பிரகாச ராஜா லேகாவையே கதாநாயகியாக அறிமுகம்

-லக்ஷ்மி ரமணன்-

செய்யப் போவதாகக் கூறி அவளை மகிழ்ச்சிக் கடலில் ஆழ்த்தினார்.

ஹீரோவாக யாரைப் போடலாம் என்ற கேள்விக்குப் பதில் தேடத் தயாரிப்பாளர் குண்டலகேசியும் பிரகாசமும் பம்பாய்க்குப் பிரயாணமானார்கள்.

'லம்பு ஹீரோ' கையில் அடிபட்டு ஒரு ஸ்லிங்கை மாட்டிக் கொண்டு நின்றவர், ''நான் ஏற்கனவே மூச்சு விட முடியாமல் திணறிக் கொண்டிருக்கிறேன். 96ம் வருடம் வாருங்கள். அதுவரை நான் கிழவனாக ஆகாமல் இருந்தால் பார்க்கலாம்'' என்று சொல்லி அனுப்பி வைத்தார். விநோதமான கன்னம் உடையவரோ ஆச்சாரியாரைப் பார்த்து வர அமெரிக்கா போய்விட்டிருந்தார்!

தர்மத்தோடு சேர்ந்த இந்திரரோ கடவுக் கன்னிக்குக் குழந்தை பிறக்கும்வரை நான் பம்பாயை விட்டு நகர மாட்டேன் என்றுவிட்டார்.

''ஹீரோவாக ஜீரோவைப் போட்டாலும் அதிர்ஷ்டம் இருந்தால் படம் ஓடிவிடும். நாலைந்து பாஷைகளில் பாப்புலராக இருக்கிற நடிகர்களை ஹீரோ, வில்லன், அம்மா அப்பா பாத்திரங்களுக்கு புக் பண்ணிவிடுவோமே. பல பிராந்தியங்களில் பட விநியோகம் சுலபமாக நடக்கும்'' என்று குண்டலகேசி சொல்ல அப்படியே கன்னட நடிகரை ஹீரோவாகவும், வங்காள வில்லனையும், மராட்டிய அப்பாவையும், தெலுங்கு அம்மாவையும் புக் பண்ணிவிட்டு வந்து சேர்ந்தார்கள்.

இத்தனையும் ஆன பிறகு ''மங்களா கி கசம்'' படத்துக்குப் பூஜை போடப்பட்டது.

'கசம்' என்கிற வார்த்தை வேறு ஏதோ திட்டுகிற கெட்ட பேச்சாகப் புரிந்துகொண்ட பத்மாட்சி ''என் பொண் நடிக்கவேண்டுமானால் உடனே படத்தின் பெயரை மாத்துங்க'' என்று போர்க் கொடி உயர்த்தினாள்.

அதனால் படத்தின் பெயர் ''மங்களா அவுர் மங்கூ'' என்றாயிற்று. (மங்கூ என்பது படத்தில் நடித்த குரங்கின் பெயர்.)

லேகா அன்றிரவே தான் மெர்ஸிடஸில் போவது போலவும், தேவ்யானி சௌபால் தன்னைப் பேட்டி காண வந்து கதவைத் தட்டுவதைப் போலவும் கனவு கண்டாள்.

அடுத்து படத்துக்குஆரம்பக் காட்சியாக லேகாவின் கத்தக் நடனம் ஒன்றும் படமாக்கப்பட்டது.

நடிகர்கள் வெவ்வேறு மொழி பேசுகிறவர்களாதலால் வசனம் பேசும்போது பாஷை நிரடிற்று. ஒருவர் சொன்னது மற்றவருக்குப் புரியவில்லை.

டப்பிங்கில் அட்ஜெஸ்ட் பண்ணிவிடலாம் என்றார் பிரகாசம் உறுதியாக.

திடீரென்று குண்டலகேசிக்கு ஒரு சந்தேகம்வந்தது. ''தமிழ்க் கதையை அப்படியே ஹிந்தியில் எடுத்தால் எடுபடாமல் போய்விடுமோ'' என்பதுதான் அது.

படத்தின் கதைச் சுருக்கம் இதுதான்:

மங்களா (தமிழில் மங்காத்தா) என்கிற பெண் விடுமுறைக்குக் கிராமத்துக்கு வரும் பொழுது மங்கூ அவளுடன் சிநேகமாகிறது. கிராமத்துப் பெண்களுடன் திருவிழாவில் கும்மியடித்துவிட்டு வரும் மங்காவும் மங்கூவும் (மங்கூ கும்மியடிக்கவில்லை. அதை மரத்தில் உட்கார்ந்து பார்க்கிறது) மாந்தோப்பில் ஒரு கொலை நடப்பதைப் பார்க்கிறார்கள். கொலையாளிகள் அவளைப் பார்த்துவிட, மங்கா பதைக்கப் பதைக்க ஓடிப்போய் (மங்கூவும் உண்டு) ரயிலிலும் லாரியிலுமாக காஷ்மீரை அடைகிறார்கள். அங்கே மங்கா தன் பெயரை மாற்றிக் கொண்டு நடன வகுப்புக்கள் நடத்துகிறாள். மாணவிகள் நடத்தும் கலை நிகழ்ச்சியைப் பார்க்க வரும் கதாநாயகன் மங்காவைப் பார்த்து மயல் கொள்ளுகிறான். அதற்குள் கொலைகாரர்கள் அங்கேயும் வந்து கழுத்தறுக்கிறார்கள். அவர்களிடமிருந்து மங்காவை மீட்டு கதாநாயகன் மணக்க மங்கூவும் அவனுக்கு உதவுகிறது. இவற்றுக்கு நடுவில் ஒரு குளியல் காட்சி, ஹெலிகாப்டர் சேஸ் எல்லாம் உண்டு.

கதையில் அடிப்படைமாற்றங்களைப்புகுத்த பம்பாயிலிருந்து மூன்றெழுத்து கதை வசன கர்த்தா அர்ஜெண்டாக விமானத்தில் வரவழைக்கப்பட்டார்

மங்களா கும்மியடிப்பது ஒரு கவ்வாலிப் போட்டியாகவும் அவள் ஓடிப்போகும் இடம் காஷ்மீருக்குப் பதில் ஸ்விட்ஜர் லாந்தாகவும் (கூடவே அங்கே ஒரு டூயட்டும் போட்டு விடலாமே என்கிற அபிப்பிராயத்துடன்) வில்லனும் ஹீரோவும் குழந்தைப் பருவத்தில் கும்பமேளாவில் பிரிந்த இரட்டைச் சகோதரர்களாகவும் இருவரும் ஒருவரை யொருவர் புரிந்து கொண்டு தங்கள் தந்தையைக் கடத்திச் சென்ற இன்னொரு வில்லனைக் கண்டு பிடிக்க முயன்று (அந்த இன்னொரு வில்லன் தான் உண்மையில் மாந்தோப்புக் கொலைக்குக் காரணமானவன் என்பதுதான் கதையின் சஸ்பென்ஸ்) கடைசியில் எல்லாம் சுபமாக முடிகிறது.



அதற்கு மேலும் கதை தொடர்ந்தாலும் லேகா கேட்கத் தயாராக இருக்கவில்லை. ஏனெனில் அவளுக்கு அதுவரை கேட்டதே தலையைச் சுற்றிக் கொண்டு வந்தது.

எங்கேயாவது செட்டில் மயங்கி விழுந்து வைத்தால் 'கிசுகிசு' பகுதியில் ''மாங்காய்ப் பட நாயகி திருமணமாகாமலேயே மாங்காய் சாப்பிடுகிற நிலையாமே'' என்று ஏதாவது தப்பாக எழுதிவிடப்போகிறார்களே என்று சமாளித்துக் கொண்டாள்.

குரங்கோடு கத்திச் சண்டை, தண்ணீருக்குள் துரத்துதல், கட்டிலைக் குப்புறப் போட்டு அவற்றின் கால்கள் மீது நின்று கொண்டு பாய்ச்சல் என்கிற மசாலாக்களில் போட்டுப் புரட்டி எடுத்து பாரீஸ் நகரில் இன்னொரு டூயட்டும் போட்டுப் படத்தை ரிலீஸ் செய்தார்கள்;

அவ்வளவுதான்.

ஐந்து ரூபாய் டிக்கட் ஐம்பது ரூபாய்க்கு விற்றது; 'பாக்ஸ் ஆபீஸை'ப் பிய்த்து உதறிக் கொண்டு படம் சக்கைப் போடு போட்டது.

எந்தப் பத்திரிகையும் லேகாவைப் பற்றி மூச்சுக்கூட விடவில்லை; மங்கூவின் நடிப்பைப் புகழ்ந்து தள்ளிய வண்ணம் இருந்தன. அது லேகாவுக்கு ரொம்ப ஏமாற்றம்தான். தனக்கு ஏற்பட்டிருக்க வேண்டிய புகழை மங்கூ தட்டிக் கொண்டு போய் விட்டதே என்று அரற்றித் தீர்த்தாள்.

அதற்கு அப்புறம் தனக்கு ஏற்பட்ட டிமாண்டைத் தாக்குப்பிடிக்க முடியாமல் மங்கூ சகிதம் அதன் டிரெயினர் பம்பாயில் ஜுஹுவில் ஃபிளாட் வாங்கிக் கொண்டு போய்விட்டதாகச் செய்திகள் வந்தன.

''வுட்டுத் தள்ளு பாப்பா அங்கே போய்ச் சப்பாத்தியைச் சாப்பிட்டுக்கிட்டு பாஷை தெரியாம யாரு கஷ்டப்படறது?'' என்று தன் மகளுக்கு ஆறுதல் சொன்னாள், பத்மாட்சி.

# இமைப் பொழுதுகள்...

ஜி. நாராயணன்

ஏது அவளைச் சட்டென்று உள்ளே போகச் சொல்லிற்று என்று தெரியவில்லை.

பழைய திரைப் படங்களையெல்லாம் தொகுத்து யாரோ கண்காட்சி நடத்துகிறார்கள் என்று குடித்தனக்காரி சொல்லியிருந்தாள். அப்பொழுது அதில் ஒரு பிடிப்பு விழவில்லை. இன்று இந்தப் பக்கமாக வந்த போது அது நினைவில் வர... உள்ளே நுழைந்து விட்டாள்.

எத்தனை படங்கள்... புத்தகங்கள்... பத்திரிகைகள்... அறை அறையாக நுழைந்து ஒவ்வொன்றாகப் பார்த்து....

யதேச்சையாக ஒரு ஸ்டில் மேல் விழுந்த பார்வை அப்படியே அதில் நிலைத்தது.

அந்தப் போட்டோவில் செழுமையாக ஒரு பெண் தெரிந்தாள். உருண்டை முகம்... பெரிய கண்கள்... சின்ன அலையாகக் கூந்தல் தோளில் புரண்டிருந்தது. மூண்டும் முடிச்சுமாக இருந்த குடிசைக் கம்பம் ஒன்றைப் பிடித்து யார் வரவையோ எதிர் நோக்கி யிருப்பது போல்....

இவளை — இந்தப் படத்தை எங்கேயோ பார்த்திருக்கிறோம்.... எங்கே ... ஓ... புரிந்ததும் மூச்சை அடைத்தது.

இதில் இருப்பது நானா? ...என் படமா?

அருகில் சென்று பார்த்தாள். சந்தேகமே இல்லை.

முப்பது வருஷங்களுக்கு முன் கதாநாயகியாகப் பளபளத்த தன் இளமைத் தோற்றத்தை மீண்டும் பார்க்கையில்...

வீட்டு வாசலில் இவளைப் பார்க்க ஒரு கும்பல் காத்து நிற்கும். 'ஜால்-ஜால்' என்று கூர்க்கா விரட்டலுக்காகச் சற்றுக் கலைந்து, பிறகு திரும்பவும் கூடும். காரில் போனால் பின்னால் கூட்டம் விரட்டும். ஓர் இடத்தை நிம்மதியாகப் பார்க்க முடியாது. சாப்பிட முடியாது. தூங்க முடியாது. கட்டுக் கட்டாகக் கடிதங்கள், போன் கால்கள்... நீங்கள் என்ன சோப்பு உபயோகிக்கிறீர்கள்... எத்தனை எத்தனை....

இந்தத் தொல்லைகளில் ஒரு போதை இருந்தது.

அம்மா மட்டும் கவலைப்பட்டாள். எதை எதையோ சாகவதம் என்று நினைத்து இந்தப் பெண் அலைகிறதே என்ற கவலை. அம்மாவும் நாடக நடிகையாகக் கொஞ்ச நாள் இருந்தவள்தான். அவள் பலம் குரலில் இருந்தது. 'ஒன்ஸ் மோர்-ஒன்ஸ் மோர்' என்று திரும்பத் திரும்பப் பாடச் சொல்வார்களாம்.

சினிமா வந்ததும் அவள் மவுசு குறைந்து போய்....

அந்தக் கவலையைப் பார்க்க இவளுக்குச் சிரிப்பாக இருந்தது. ஹ.... அம்மாவுக்கு ஒன்றும் தெரியாது. படிப்பு அதிகம் இல்லை. எப்பொழுதோ அவள் புறக்கணிப்பட்டதை நினைத்துப் புலம்புகிறாள். இப்பொழுது காலம் மாறிவிட்டது. அம்மாவை விட என்னிடம் அழகு இருக்கிறது... திறமை இருக்கிறது....

மனத்தில் நிறைய எதிர்பார்ப்பு இருந்தது. எதையோ பெரிதாகச் சாதிக்கப் போகிற பரபரப்பு... அது என்னால் முடியும்,

கொஞ்ச நாள்—

ரொம்பவும் எதிர்பார்க்கப்பட்ட இவள் படம் ஒன்று பயங்கரமாக விழுந்தது... இன்னும் இரண்டு படங்கள் சுமாராக ஓடிய சமயம், சேர்ந்தாற்போல் நாலைந்து தோல்வியைத் தழுவ....

இவளைத் தேடி வருபவர்கள் 'சடசட' என்று குறைந்தார்கள்.

அந்த இடைவெளியில் நிறையப்பேர்கள் இவள் இடத்துக்குப் போட்டியிட—

சிறிது சிறிதாக இவள் மறக்கப்பட்டாள்.

அந்த ஸ்டில்லிலிருந்து பார்வையைத் தன்மீது திருப்பினாள்.

'மொழு மொழு'வென்று அழகாகத் தெரியும் அந்தஉடம்பா இப்படி இளைத்துக் கறுத்து எலும்பு முட்டிக் கிடக்கிறது...முதுகில் லேசாகக் கூனல்... தோலில் பசையற்று, சுருக்கங்கள் காட்டியது. தலை நரைத்து, கூழை பாய்ந்திருந்தது. எவ்வளவு வித்தியாசங்கள்.. பழைய அடையாளம் எதுவும் இல்லாமல் பூமியில் இப்படியே ஒரு கிழவியாக ஜனித்தது போல்....

அத்தனை வாளிப்பும் வனப்பும் சடாரென்று இவளை உதறிவிட்டு எப்படிப் போயின... நெருப்பில் இலையை வாட்டுகிற சுருக்கில், துவண்டு, சுருங்கி, பசுமைஅழிந்து!...

ஆச்சரியந்தான்.

இவ்வளவு அழகாகவா நான் இருந்திருக்கிறேன்?

நெருங்கிச் சென்று பார்க்க முயல—

''இந்தாம்மா ...அதை யெல்லாம் தொடக் கூடாது...''

இவள் பின்வாங்கினாள். சட்டென்று எதிலோ மோத...

''....அடடே.... நீங்களா... வாங்க... வாங்க....நமஸ்காரம்.... எல்லாம் பார்த்தீங்களா?''



படம்: ஜியோ தோ ஐஸே ஜியோ

**ஒரு இந்திப் படம்; ஒரு தமிழ்க் கதை**

# 5

நடிப்பு: தீபஸ்ரீசாய்

இவளை அடையாளம் தெரிந்து கொண்டது யார்?... யார் என்று தெரியவில்லை. பார்த்த முகமாக இல்லை... பத்திரிகை நிருபரா... பழைய நடிகரா ....

''...இவங்கதான் மரகதம்... பழம்பெரும் நடிகை.''

அருகில் நின்றிருந்த இளம் பெண்ணுக்கு அறிமுகப்படுத்தினர். அவள் முகத்தில் மேக்கப் இருந்தது. கொஞ்சம் மாநிறம். மூக்கு எடுப்பாக, உடல் கச்சிதமாக... கண்களில் ஓர் அலட்சியம்... ரொம்பவும் அலட்சியம்....

''இதுதான் ஸ்ரீகலா. இப்ப ஃபீல்டிலே ரொம்ப பிஸி... எண்பத்தி மூணு வரைக்கும் கால்ஷீட்....''

''சௌக்கியமாம்மா....''

அவள் எங்கேயோ கவனமாக இருப்பது போல் இருந்தாள். உன்னோடு எனக்கு என்ன பேச்சு என்று முகம் சொல்லிற்று.

அந்த அலட்சியம் இவளைக் கொதிக்க வைத்தது.

'....நானும் உன்னைப் போல் இருந்தவள் தாண்டி...' என்று எதிரே இருந்த ஸ்டிலை அவளிடம் காட்ட ஆசைப்பட்டாள். எதுவும் கண் சிமிட்டுகிற நேரம்தான் என்று சொல்ல.... வேண்டாம்.... இப்பொழுது இவள் போட்டிருக்கிற மேக்கப் கலைந்து. முதுமை தன் மேக்கப்பை ஆரம்பிக்கும்போது புரிந்துவிடும்.

வெளியே வந்தபோது ஒரு போஸ்டர் கண்ணில் பட்டது.

திரையுலகம் அதில் தன் பொன் விழாவைக் கொண்டாட.... கேடயங்கள் வழங்க....

அதன் அருகில் நின்று இதற்காகத் தான் எதையெல்லாம் இழந்திருக்கிறோம் என்று அவள் கணக்குப் பார்க்க ஆரம்பித்தாள்.

---

**இரண்டு இட்டிலியின் விலை ஒன்பது ரூபாய்!**

தமிழக மேல்சபைத் தலைவரான திரு ம.பொ. சிவஞானம், கல்கத்தாவுக்குச் சென்றிருந்தார். அவர் தங்கியிருந்த ஓட்டல் ஐந்து நட்சத்திர அந்தஸ்து பெற்றது.

காலைச் சிற்றுண்டியாக இரண்டு இட்டிலி ரூமுக்கு வரவழைத்துச் சாப்பிட்டார். கூடவே ஒரு கப் காப்பியும் சாப்பிட்டார்.

இரண்டுக்கும் சேர்த்து பில் பதினான்கு ரூபாய்கள்!

| | | | |
|---|---|---|---|
| இட்டிலி 2க்கு | ரூ. | 9 | 00 |
| காப்பி ஒரு கப் | ரூ. | 5 | 00 |

இந்த விலையில் சிற்றுண்டி சாப்பிட்டது அதுவே முதல் தடவையாம்!

ஒரு பொதுக் கூட்டத்தில் ம. பொ. சி. கூறக் கேட்டவர்;

—ஏ. சுவாமிநாதன்



# இந்திரா மகிழ்ந்தது ஏன்?

மார்கழி மாதக் குளிருக்குப் பயந்து பஜனைக் கோஷ்டியில் சர்வாங்கமும் போர்த்திக்கொள்ளும் சென்னை வாசிக்கு அண்டார்ட்டிகா அலர்ஜியாகத்தான் இருக்கும். அங்கு இப்பொழுது டெம்பரேச்சர் மைனஸ் பத்து டிகிரி முதல் மைனஸ் இருபது டிகிரி செல்ஸியஸ். நினைக்கும்போதே பல் நடுங்குகிறதல்லவா? இதில் வேடிக்கை என்னவென்றால் அங்கு இப்பொழுது கோடைக்காலமாம். பகல் நேரம் சுமார் 22 மணிகள் நீடிக்கும்.

தென் துருவத்தில் இருக்கிறது அண்டார்ட்டிகா கண்டம். இந்தியாவுக்குத் தெற்கே 8000 மைல்களுக்கும் அப்பால் உள்ளது. இதில் மனிதர்கள் இல்லை. இதன் பரப்பளவு சுமார் 4.5 மில்லியன் சதுர மைல்கள். இங்குள்ள கடல்களும் நிலங்களும் உறைபனி நிறைந்தவை. இங்கு மேற் பரப்பில் உள்ள பனி முகப்புகள் உருகினால் பூமியில் உள்ள கடல்களெல்லாம் சுமார் 200 அல்லது 300 அடி உயருமாம்!

இந்தியாவிலிருந்து 21 பேர் கொண்ட விஞ்ஞான ஆராய்ச்சிக் குழு இம்மாதம் 9ந் தேதி காலை 3 மணிக்கு அண்டார்ட்டிகாவை அடைந்தது. இக்குழு டிசம்பர் 6ம் தேதி கோவாவிலிருந்து "போலார் சர்க்கிள்" என்ற நார்வே நாட்டு வாடகைக் கப்பலில் புறப்பட்டது. இக்கப்பலுக்கு வாடகை ரூ. 1 கோடி. சகல விஞ்ஞான சாதனங்கள் பொருத்திய இக் கப்பலின் விலை சுமார் ரூ. 8 கோடி. கடல் ஆராய்ச்சியில் நம் நாடு முன்னேறி வருவதால் இந்தியா தனக்கென விரைவில் இம்மாதிரிக் கப்பல் ஒன்றை வாங்கக் கூடும். இந்திய விஞ்ஞானக் குழு நார்வே நாட்டுக் கப்பலில் சென்றதும் ஒரு சுப சகுனம்தான். ஏனெனில் நார்வே நாட்டைச் சேர்ந்த ரோனல்ட் அமுண்ட்ஸன் என்பவர்தான் 1911ம் ஆண்டு முதன் முதலில் தென் துருவத்தை அடைந்தவர்.

அண்டார்ட்டிகாவுக்குப் பயணம் செய்தவர்களில் பலர் குளிர் தாங்க முடியாது உறை பனியில் சிக்கி உயிரிழந்திருக்கிறார்கள். அமுண்ட்ஸனுக்குப் பின் சென்ற இங்கிலாந்தைச் சேர்ந்த காப்டன் ஸ்காட் தமது பரிவாரத்துடன் 1912ல் உயிரிழந்தார். முதன் முதலில் அண்டார்ட்டிகாவை அடைய முயன்றவர் 18ம் நூற்றாண்டைச் சேர்ந்த

பி.எஸ்.ராமமூர்த்தி

காப்டன் குக். இந்த நூற்றுண்டில் அமெரிக்கா, ருஷியா, பிரான்ஸ், ஆஸ்திரேலியா, ஜப்பான் முதலிய நாடுகள் தமது ஆராய்ச்சிக் குழுக்களை இங்கு அனுப்பி, தமது நிலைக்களங்களையும் அமைத்திருக்கின்றனர்.

தற்காலத்தில் அண்டார்ட்டிகா செல்வது அவ்வளவு கடினமான காரியமல்ல. இப்பொழுது அது சுற்றுலாப் பயணிகளின் ஒரு சொர்க்கமாகி விட்டது என்கிருர் ''இந்தியன் எக்ஸ்பிரஸ்'' ஹாரி மில்லர். நார்வே நாட்டு உல்லாசக் கப்பல் இங்கு அடிக்கடி வருகிறது. நியூஜிலாந்திலிருந்து சுற்றுலா வாடகை விமானம் ஒன்று அண்டார்ட்டிகாவுக்குப் பயணிகளை அழைத்து வருகிறது. இங்கு ஐந்து நட்சத்திர ஹோட்டல் வசதியுடன் கூடாரம் அமைத்து வாழும் அளவுக்கு விஞ்ஞானம் வளர்ந்திருக்கிறது.

அண்டார்ட்டிகாவில் நிலக்கரி, மற்றும் செம்பு, தங்கம், இரும்பு இவைகளின் தாதுக்கள் ஏராளமாகப் புதைந்து கிடக்கின்றன. புரோட்டீன் தரும் மீன்களும், கடல் பிராணிகளும் இங்கு ஏராளம். 1959ல் அண்டார்ட்டிகா சம்பந்தமாக 12 நாடுகளுக்கு இடையே ஓர் உடன்பாடு ஏற்பட்டு, 1961ல் அது கையெழுத்து இடப்பட்டது. இப்போது மேலும் 7 நாடுகள் இதில் கையெழுத்திட்டுள்ளன. இந்த உடன்படிக்கை அண்டார்ட்டிக்காவை ராணுவ காரியங்களுக்குப் பயன்படுத்துவதைத் தடை செய்துள்ளது. விஞ்ஞான ஆராய்ச்சிகளுக்கு மட்டுமே இப் பகுதி பயன்படுத்தப்பட வேண்டும் என்று விதித்துள்ளது. ஆனால் கையெழுத்திட்ட நாடுகளும், கையெழுத்திடாத வளரும் நாடுகளும் இப்பகுதியில் உள்ள கனிவளங்களைச் சொந்தமாக்கிக் கொள்ள முயலுகின்றன. 1991ல் உடன்படிக்கை காலாவதியான பிறகு அமைதியான அண்டார்ட்டிகா வல்லரசுகளின் போர்க்களமாக மாறினாலும் ஆச்சரியமில்லை.

இந்திய கோஷ்டியின் அண்டார்ட்டிகா விஜயம், இந்து மகா சமுத்திரத்தை ஆராயவும், வானிலை சம்பந்தப்பட்ட விவரங்கள் அறியவும் வழி செய்கிறது. அண்டார்ட்டிகாவில் ஏற்படும் வானிலை மாற்றங்கள் நம் நாட்டுப் பருவ நிலைகளைப் பாதிக்கின்றன. இவைகளை விஞ்ஞான ரீதியாக ஆராய்ந்து அறிந்து, பருவநிலைக் கோளாறுகளைச் சமாளிக்கத் தக்க முன் நடவடிக்கை எடுத்தால், அது நமது விவசாயிகளுக்குப் பேருதவியாக இருக்கும்.

பிரதமர் இந்திரா காந்தி தமது வாழ்த்துச் செய்தியில் இந்திய விஞ்ஞானக்குழுவின் இப்பயணம் தமது நீண்ட காலக் கனவுகளில் ஒன்றைப் பூர்த்தி செய்திருக்கிறதென்று கூறியிருக்கிருர். பனி படர்ந்த மலைகளிலும் நிலங்களிலும் அபரிமிதமான அன்பைச் சொரிந்தவர் பண்டித நேரு. அவரது புதல்வியான இந்திராவுக்கும் அத்தகைய அன்பு ஏற்பட்டிருப்பதில் வியப்பில்லை.

◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆



## ஆன்றோர் வாக்கு...

தாயை மதியாச் சேயில்லை. மகான்களின் பெருமை மாதாப் பெருமையே: நாம் தாயிடம் செல்வோம். அவளே நமது புகல்; அவளே நமது கதி மோட்சம். இந்தியா நமது தாய். சக்தி. அவளை இதயத்தில் வணங்குவோம். அவளை அன்பு செய்வோம்.

—அரவிந்தர்

உனக்கு ஆண்டவன் கண்களை அருளியிருப்பது எதற்காக? அவன் படைப்பின் பெருமையைக் கண்டு அவனைப் போற்றுவதற்காகத் தானே. வா, இயற்கையோடு கூடி மகிழுவோம். அடைந்துகிடக்கும் அறையை விட்டு வெளியே வா. இயற்கையின் இனிய காட்சிகளைக் கண்டு அவற்றில் உன் உள்ளத்தை ஈடுபடுத்து.

—இக்பால்

குழந்தை முதல் பெரியோர் வரை எல்லோருக்கும் கடவுளிடம் பக்தி இருக்கவேண்டும். நம்முடைய மனம் எப்போதும் சஞ்சலப்பட்டுக்கொண்டே இருக்கிறது. மனத்துக்குச் சாந்தியே கிடைப்பதில்லை. மனச் சாந்திக்குத் தான் கடவுளிடம் பக்தி கொண்டிருக்க வேண்டும். சலனமற்று அழியாமல் ஆனந்தமாய் இருக்கக் கூடியவர் கடவுள் ஒருவரே. அவரை நாம் நினைக்க நினைக்க நம் சிந்தையும் செய்கையும் மாறாமல், அழியாமல் நாம் ஆனந்தமாயிருக்கலாம்.

ஜகத்குரு ஸ்ரீ காஞ்சி காமகோடி சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சாரிய சுவாமிகள்

பெண்ணின்பால் பெண்மை, தாய்மை, இறைமை என்னும் மூன்று நீர்மைகள் விளங்குதல் கருதற்பாலது. பெண்ணைக் காமப் பொருளென்று கருதிக் கொண்டிருக்கு மட்டும் இறைமை உணர்வுக்கு இடமேது?

—திரு. வி. க.

எனக்கு நாலைந்து பாஷைகளிலே பழக்கம் உண்டு. இவற்றிலே தமிழைப்போல வலிமையும் திறமையும் உள்ளத்தொடர்பும் உடைய பாஷை வேறு ஒன்றுமே இல்லை.

—பாரதியார்

## 3

அவர்கள் இருவரையும் கூட அறைக்குள் இருக்கும்படி சொல்லிவிட்டு, கதவைச் சாத்தி விட்டு அவன் தன் சோதனைக் குழாயை எடுத்து மயங்கிக் கிடந்தவளைப் பரிசோதிக்க ஆரம்பித்தான்.

டாக்டர் என்ன சொல்லப் போகிறாரோ என்றதொரு அச்சத்தில் சந்தியாவின் மார்பு வேகமாகத் துடித்தது.

ராதிகாவுக்கு இளம் வயது. பருவக் கோளாறு. .ஏதாவது நடந்து விட்டிருந்தால்?

சந்தியா பள்ளிக்கூடத்தில் படித்த காலத்தில் இப்படித்தான் ஒரு பெண் வகுப்பில் மயங்கி விழுந்தாள். அந்த மயக்கத்தின் காரணம் வேறு என்ற விஷயம் அம்பலமான போது ஊரே இரண்டு பட்டுப்போன விவரம் நினைவுக்கு வரவே அவள் உடல் பயத்தில் நடுங்கியது. அத்தனை கவலையையும் திகிலையும் அதுசமயம் அனுபவிக்க வேண்டியவர்கள் அந்தப் பெண்ணின் பாட்டனும் பாட்டியும் தான். ஆனால் வகுப்புஆசிரியை என்ற முறையில் சந்தியா அவைகளில் மூழ்கி யிருந்தாள்.

''ஒண்ணுமில்லே. வெறும் பசி மயக்கம். கொஞ்சம் குளுகோஸ் கலந்து கொடுத்தால் சரியாகிவிடும்'' சொல்லிக் கொண்டே அவன் தலைவியைப் பார்த்துப் புன்னகைத்தான்.

'தாங்க்யூ டாக்டர்! இந்தப் பெண்ணுக்கு ஏதாவது நல்ல டானிக் எழுதி இந்த மச்சர் கிட்டக் கொடுத்துட்டு நீங்க என் அறைக்கு வாங்க. உங்களுடைய விசிட்டிங்பீஸை உடனடியா செட்டில் பண்ணிடறேன்.'' — தலைவி மிடுக்காகக் கூறிவிட்டுக் கிளம்பினான். அறை வாயிலைத் தாண்டு முன் திரும்பி, ''ஆமாம்! உங்க பேர் என்ன சொன்னீங்க?'' என்று கேட்டான்.

''நான் இன்னமும் என்னை அறிமுகப் படுத்திக்கலியே... என் பேர் இரி

# சாதாரண மனிதன்

'லக்ஷ்மி'





தரன். எனக்கு இந்த ஊர் புதிது. என் நண்பர்கள் ஆரம்பிச்சிருக்கிற பாலி கிளினிக்கில் வந்து சேர்ந்து சில நாட்கள்தான் ஆகிறது.''

''அப்படியா... சந்தோஷம்.'' — தலையை அசைத்துவிட்டுத் தலைவி வேகமாக வெளியேறினாள்.

வெறும் பசி மயக்கம் என்றதுமே வயிற்றில் பாலை வார்த்துவிட்ட மகிழ்ச்சியில்... நிம்மதியில் தாராளமாக மூச்சு விட்டாள் சந்தியா.

''நல்ல வசதியான குடும்பத்துப் பெண். பசி மயக்கம் வந்து விழுவானேன்? ஆச்சரியமாயிருக்கு...'' பொதுவாக முணு முணுத்தான் மெல்லிய குரலில்.

மருந்துப் பெட்டியிலிருந்த குளுகோஸ் பொடியை ஸ்பூனில் அள்ளி பெஞ்சு ஓரத்தில் இருந்த கண்ணாடி டம்ளரில் மீதமிருந்த தண்ணீரில் போட்டுக் கலந்து கொண்டே புன்முறுவலுடன் நிமிர்ந்தான் அவன்.

''ஆரோக்கியமாக வளர வேண்டிய பள்ளிக் கூடத்துப் பருவப் பெண்கள் இப்போவெல்லாம் உடம்பு எடையைப்பத்திக் கவலைப் படறாங்க. மெலிதாக உடம்பு இருக்கணும்னு ஒரு பிடிவாதம். பட்டினி கிடந்து இப்படி வகுப்பிலே மயக்கம் போடறது சகஜமாயிட்டது. நீங்க வகுப்பு ஆசிரியர் தானே. ஒரு காரியம் செய்ய முடியுமா?'' — லேசாகச் சிரித்தபடி அவன் டம்ளரை ராதிகாவிடம் நீட்டினான்.

''ஒரே மூச்சாக் குடிக்கணும். இனிமே சாப்பிடாமக் கிளாசுக்கு வரக் கூடாது தெரிஞ்சுதா....'' அதட்டினான்.

''நான் என்னவோ ஒரு காரியம் செய்யணும்னு சொன்னீங்களே டாக்டர்... சொல்லுங்க செய்யறேன்.'' — துணிவை வரவழைத்துக் கொண்டு கேட்டாள் சந்தியா. மனம் ஏனோ பரபரத்தது.

'' 'ஆரோக்கியமா — இளமையோடு — அழகாக — நீண்ட காலம் வாழ வேணுமானால் உனது காலை உணவை முழுவதும் நன்முகச் சாப்பிட்டுவிடு. மதியம் சாப்பிட நீனக்கும் உணவைத் தோழியுடன் பங்கிட்டுக் கொள். இரவு சாப்பிட எடுத்து வைத்ததை விரோதிக்குப் பரிமாறிவிடு!' — இந்தக் கருத்தைத் தினமும் வகுப்பு ஆரம்பிக்கு முன் உங்கள் மாணவிகளுக்கு ஒரு பாடமாக நீங்கள் போதித்தால் அவர்களது வாழ்க்கைக்கு ரொம்ப உபகாரமாக இருக்கும்.''

களுக்கென்று சந்தியா சிரித்து விட்டாள். டாக்டர் மகா பொல்லாதவராக இருக்கிறாரே... வேடிக்கையாகப் பேசுகிறாரே!...

அதற்கு மேல் அவன் அங்கே நிற்கவில்லை. மருந்துப் பெட்டியைத் தூக்கிக் கொண்டு விரைவாக வெளியேறிவிட்டான்.

ஆனால் அன்று முழுவதும் அவனது நினைவின்று அவள் விலகியே செல்லவில்லை. வகுப்பில் பாடம் நடத்திக் கொண்டிருந்தபோது... ஓய்வாக ஆசிரியர் அறையில் தங்கியிருந்தபோது...ராதிகாவைப்பார்த்தபோது...பகல் உணவுக்கு டிபன்பாக்ஸைத் திறந்தபோது...என்று

பல தடவைகள் அவள் நினைவில் வந்து வந்து மறைந்து கொண்டிருந்தான்.

அன்று மாலை வீடு திரும்பியவளிடம் ஜகதா அவள் பெயருக்கு வந்த கடிதத்தைக் கொடுத்தாள்.

மூத்த அக்காள் உஷாவின் கணவர் கணேசன்தான் சேலத்திலிருந்து எழுதியிருந்தார்.

'உன் அப்பாவின் வருஷ திவசம் வருகிற வியாழன் அன்று நடக்கவிருப்பதால் நானும் உஷாவும் நாளைக் காலை புறப்பட்டுவர இருக்கிறோம். குமரேசன் அவர்கள் இதைப் பற்றி வற்புறுத்தி எனக்குப் போன வாரமே கடிதம் போட்டிருந்தார். வீண் குழப்பத்தைத் தவிர்க்க திவசத்தை நம் வழக்கத்தை ஒட்டி செய்து முடித்து விடலாம். செலவைப் பற்றிய கவலை வேண்டாம். நானும் உஷாவும் எங்களால் ஆனவரை கூட இருந்து உதவி செய்வதாகத் தீர்மானித்திருக்கிறோம். உன் அப்பாவுக்கு இது பற்றிய அபிப்ராயமே வேறாக இருந்தது. அவர் இறந்து போவதற்குச் சில நாட்கள் முன்பு ஒரு தடவை என்னிடம் மனம் விட்டுப் பேசியதை இங்கே குறிப்பிட விரும்புகிறேன். தமது மறைவு நாள் அன்று கோயிலில் ஒரு அர்ச்சனையும் ஏதாவது ஒரு ஏழைக் குழந்தைக்குச் சாப்பாடும் கட்டத் துணியும் படிக்கத் தேவையான புத்தகமும் வாங்கி அளித்தால் போதும். மற்றபடி ஊர் கூட்டி அமர்க்களப்படுத்தத் தேவையில்லை என்று கண்டிப்பாகக் கூறியிருந்தார். ஆனால் குமரேசன் இந்தக் கருத்தை ஒத்துக்கொள்ள மாட்டார். மற்றவை நேரில். கணேசன்.'

கடிதத்தை மடித்துக் கோபத்துடன்மேஜை மீது வைத்தாள். குமரேசன் அத்தான் லேசுப்பட்டவர் அல்ல. அந்தப் பக்கம் தன் சகலபாடியை ஏவிவிட்டு இந்தப் பக்கம் நேரே புறப்பட்டு வந்து குழப்பம் விளைவித்துப் போயிருக்கிறார்.

ஒரு பெண் தன்னந் தனியாக வாழ நேர்ந்து விட்டாள் என்றதும் அத்தனை இளப்பமா?

பற்களைக் கடித்தாள். முதல் நாள் மாலை அவர் வீட்டுக்குள் வந்து நிகழ்த்திய ஆர்ப்பாட்டம் நினைவுக்கு வந்தது.

வாயிற்படியைப் பிடித்துக் கொண்டு நின்ற அத்தான் குமரேசன் அவளை எரித்து விடுபவர் போல உறுத்துப் பார்த்தார்.

''சும்மாதான் கேட்கிறேன் — வீடு வாங்க வந்த அந்த மனுஷனை ரெண்டு பேரும் ஓட ஓட விரட்டினீங்களாமே? அவரை என்ன நினைச்சுக்கிட்டு இப்படிப் பேசினே சந்தியா? உங்க தோட்டம் கொத்த வந்த ஆள்னு நினைப்பா?'' என்று அங்கவஸ்திரத்தை ஆத்திரத்துடன் உதறி ஜிப்பா மீது போட்டுக் கொண்டார்.

குமரேசன் அவள் அக்கா சூர்யாவின் கணவன். அவளை வேண்டுமானால் கணவன் என்ற தகுதியில் அதட்டி உருட்டி மிரட்டலாம். சந்தியாவை அதட்டிக் கேட்க அவனுக்கென்ன அதிகாரம்?

வார்த்தைகளை வாரி வீசிவிட முடியும் அவளுக்கு. அக்கா முகத்துக்காகப் பொறுமையுடன் புன்னகைத்தாள்.

''வீட்டை விற்கப் போறதில்லேன்னு முடிவு செய்துவிட்டோம். அதைச் சொன்னோம்.''

''வீட்டை விக்காட்டி — வரதட்சிணைப் பணம் இல்லாட்டி எவன் உன்னைக் கட்டிக்குவான்?''

''எவனும் கட்டிக்கத் தேவையில்லே. இப்படியே இருந்துட்டுப் போறேன்....''

''பேச மாட்டியா?... உங்கப்பா மத்த பெண்களுக்குத் துரோகம் பண்ணிட்டு வீட்டை உன் பேரில் எழுதி வைச்சுட்டுப் போயிருக்கார். அந்தத் திமிர்.''

''அப்பா உடம்புக்கு முடியாம இருக்கும் போதே வீட்டைப் பத்தின பிரச்னைகளை நீங்க இரண்டு அத்தான்களும் அவரிடமே பேசி ஒரு வழியா முடிச்சிருக்கணும்.''

''குமரேச! உட்காரப்பா. குழந்தைகளையும் சூர்யாவையும் உள்ளே கூப்பிடு.''

''அந்த மனுஷன் தன் கப்பல் காரைக் குடுத்து என்னை அனுப்பி வீட்டைப் பத்தித் தீர்மானமாக் கேட்டுட்டு வரச் சொன்னதாலே புறப்பட்டு வந்திருக்கேன். விருந்து சாப்பிட மருமகனை இங்கே வரலே.''

'வீடு விக்கும் தரகரா வந்திருக்கீங்களா அத்தான்?'' — நாக்கு நுனி வரை வந்துவிட்ட வார்த்தைகளைக் கடித்துக் கொண்டாள் சந்தியா — எழவிருந்த ஒரு பெரிய சண்டையைத் தவிர்க்க.

''அத்தான் உங்களுக்குப் பிடிச்ச இடியாப்பம் அத்தை செய்திருக்காங்க...காப்பி பலகாரம்சாப்பிட்டுட்டுக் கொஞ்சம் இளைப்பாறிட்டுப் பிறகு பேசலாமே...'' உபசரித்தாள்.

''வீட்டைப் பத்திப் பேச வந்தேன். இடியாப்பம் சாப்பிடவும் இளைப்பாறவும் வரலே. உங்கப்பா திவசம் வேறே வருது. அதைப் பத்தி ஏதாச்சும் முடிவு செய்தியா? பிள்ளை இல்லாத மனுஷன்னுட்டுப் பரிதாபப்பட்டு மூத்த மாப்பிள்ளை கணேசு அவருக்குக் கொள்ளி போட்டுக் கரையேத்திட்டார். இப்போ வருஷ திவசம் வருது. எடுத்துச் செய்ய வேண்டாமா?''

''செஞ்சாப் போச்சு. அப்பாவுடைய கொள்கைகள் பத்தி உங்களுக்குத் தெரியும்.''

''ஆமாம். உங்கப்பா பெரிய சீர்திருத்தவாதி. அவர் பாட்டுல சொல்லிட்டுப் போயிட்டாச் சரியாப் போயிடுமா? ஐதிகம்னு ஒண்ணு இருக்கில்லையா? ஊர் உலகத்தை மதிக்க வேணாமா? உறவுக்காரங்களுக்குப் பதில் சொல்ல வேணாமா?''

'ஆண் துணை யாரும் இல்லாது இரண்டு பெண்கள் தனிமையில் வசிக்கிறார்களே

**சென்னை டெஸ்ட்:**

**போட்டி முடிவு**

ஆறு விடைகளைச் சரியாக எழுதி ரூ 100 பரிசை முழுசாகத் தட்டிக் கொண்டு செல்பவர்:

**பி. டோம்பையா**
**6, ராமசுவாமி மேஸ்திரி தெரு**
**வுட்ஸ் ரோடு**
**சென்னை-2.**



# கல்கி

**சந்தா விவரம்**

★

| | ஓராண்டு | ஆறு மாதம் |
|---|---|---|
| இந்தியா | ரூ. 60 | ரூ. 30 |
| இலங்கை (இந்திய நாணயப்படி) | ரூ. 70 | ரூ. 35 |
| இதர வெளிநாடுகள் (கப்பல் தபால் மூலம்) | ரூ. 140 | ரூ. 70 |

**மானேஜர்**

கல்கி, சென்னை - 600 032

---







# தை பிறந்தால் ஜோக் பிறக்கும்!

சண்முக அறிவுடை நம்பி

□ ''என்னங்க சந்தனத்துக்குப் பதிலா மஞ்சள் பெயிண்டை நீட்டறீங்க, சாப்பிட்டுட்டு வரவங்ககிட்டே?''

''சாப்பிட்டவங்களே அடுத்த பந்திக்கும் வந்து உட்காராமல் இருக்கத்தான்!''

□ ''பொண்ணு ரொம்ப மாடர்ன் போலிருக்கே?''

''ஏன் என்ன செஞ்சாள்?''

''அம்மி மிதித்து அருந்ததி பார்க்கச் சொன்னதுக்கு அதெல்லாம் மாட்டேன்னுட்டு 'மிக்சி'யை மிதிச்சி அருந்ததி பார்க்கிறுள்!''

□ ''ஜானவாச ஊர்வலம்தான் முடிஞ்சு போச்சே ஏன் பொண்ணோட அப்பா ஜானவாசம் வந்த வழியே ஓடுறாரு?''

''இந்தக் குழந்தைங்க பட்டாளம் நெருக்கின நெருக்கிலே மாப்பிள்ளை எங்கேயோ வழியிலேயே இறங்கிட்டாராம், அதான் தேடிட்டுப் போறார்!''

□ ''கராத்தே தெரிஞ்ச பெண்ணைக் கட்டிக்கிட்டது தப்பாப் போச்சு!''

''ஏன், என்ன பண்ணிட்டாள்?''

''அம்மி மிதிக்கச் சொன்னு ஒரே மிதியாய் மிதிச்சு உடைச்சிட்டாள்!''

என்று உதவ ஊரும் உலகமுமா முன்வந்தது? உறவினர்கள்தான் அக்கறை காட்டினுங்களா?... அவங்க அபிப்பிராயத்தைப் பத்தி எனக்குக் கவலேயில்லே' — ஆவேசமாகப் பேச ஆத்திரமாகத்தான் இருந்தது.

''அத்தான்! குழந்தைகளேயும் அக்காவையும் உள்ளே அழைச்சுக்கிட்டு வாங்க. வாசலிலேயே நின்னுக்கிட்டு இதென்ன வம்பு...'' தன்னுள் எழுந்த கோபத்தை அடக்கிக் கொண்டு சிரிக்க முயன்ருள்.

அன்று அவர்கள் வீடு அமர்க்களப்பட்டுப் போயிற்று. அவர்கள் திருச்சிக்குத் திரும்புவதற்குள் சந்தியாவும் அத்தையும் ஓடி ஓடி வேலே செய்து ஓய்ந்து போய் விட்டிருந்தனர்.

இப்போது வியாழனன்று மறுபடியும் குழப்பமா? — உத்தரவு வாங்கிக் கொண்டு அத்தை கடிதத்தைப் படித்தாள். அவள் நெஞ்சு கோபத்திலே கொதித்தது.

''குமரேசனைப் பாம்புனு தாண்ட முடியாது பழுதுன்னு மிதிக்க முடியாது. ரொம்ப எக்கச்சக்கமான பேர்வழி. நமக்குன்னு இப்படி ஒரு மருமகன்... ஐயோ... வருஷத் திவசம் வருதேன்னு வயித்திலே நெருப்பைக் கட்டிக்கிட்டிருக்கேன். என்ன கூத்தடிக்கப் போறுனே இவன்...'' அத்தை புலம்பினுள். அவர்கள் பயந்த வியாழக்கிழமையும் வந்து சேர்ந்தது. முதல் நாள் இரவே தங்கள் காரில் கணேசனும் அக்கா உஷாவும் வந்து சேர்ந்து விட்டனர். மூத்த அக்கா தேவையான சாமான்களுடன்தான் புறப்பட்டு வந்திருந்தாள். அன்று வேலேக்கு லீவு போட்டுவிட்டுச் சந்தியா அத்தைக்கு உதவியாக இருந்தாள்.

குமரேசன் வழக்கம்போல் பழுதுபார்க்க வந்த கார் ஒன்றை எடுத்துக் கொண்டு தமது படையுடன் வந்திறங்கினுர். எவ்விதக் குறையும் இன்றித் திவசம் நடந்தேறியது. மாமனுர் விருப்பப்படி கணேசன் ஏழைக் குழந்தைஒன்றுக்கு உணவளித்து, துணிதானம் செய்து, புத்தகங்கள் வாங்கிக் கொடுத்து விட்டுக் கிளம்பத் தயாரானபோதுதான் குமரேசன் சண்டையைத் துவங்கினுன்.

''சந்தியாவுக்கு நீங்கதான் புத்தி சொல்லணும். வீடு நல்ல விலேக்கு வருது. வித்துடச் சொல்லிக் கொஞ்சம் எடுத்துச் சொல்லுங்க கணேசன்'' என்ருர்.

''வீடு அவளுடையது. அதை விற்க வற்புறுத்த நமக்கு உரிமை இல்லேயே'' என்ருர் மூத்த மருமகன் கணேசன்.

''ஏன் இல்லே..... அப்பாவின் மற்றப் பெண்களுக்கும் பங்கு உண்டல்லவா ...'' இரைந்து கத்தினுள் அக்கா சூர்யா.

''அப்பா உசிரோட இருந்தப்ப நம்மையெல்லாம் கூப்பிட்டு வீட்டை சந்தியா பேர்ல எழுதி வச்சுட்டு அதுக்கு நம்ம பங்குக்கு உண்டான ஈடு தொகையை ரொக்கமாகக் கொடுத்துட்டாரே...மறந்திட்டியா...உஷா'' வாதாடியபோது சூர்யாவுக்குக் கோபம் தலேக்கேறிவிட்டது.

''நீ சொல்ல மாட்டியா... காரும் பங்களாவுமாக உன் கணவர் சம்பாதிக்கிற பணத்தின் மேலே உட்கார்ந்து கொண்டு பேசறே. என்னைப் போல் குழந்தை குட்டிகளோட

திண்டாடினு அப்பப் பேசறதே வேறேயா இருக்கும். என் கணவர் சம்பாதிக்கிற அத்தனை பணமும் தொழிற்கூடமே விழுங்கிடறது..'' கிரீச்சிட்டுக் கத்தினுள்.

''எங்கண்ணன் மறைந்த நாள் இது. இன்னிக்கு இப்படி ஒருவிவாதம் தேவையா?'' குறுக்கிட்ட அத்தை மீது சூர்யா சீறி விழுந்தாள்.

''உங்களுக்கு எப்பவும் சந்தியாதான் உசத்தி. அவளுக்குத்தானே உங்க கிட்ட இருக்கிற மிச்ச சொச்ச சொத்தை விட்டுட்டுப் போகப் போறீங்க... அதுக்குத்தானே அவள் உங்களைத் தன்னேட வச்சிக்கிட்டுக் காக்கா பிடிச்சுட்டு இருக்கா...'' கத்தினுள்.

உஷா இடைமறிக்க, கணேசன் நடுவில் புகுந்து சமாதானக் கொடி காட்ட ஒரு வழியாக வீட்டுப் பின் பக்கத் தோட்டத்திலிருந்து காய்களைக் கணிசமாகப் பறித்துக் கூடையில் நிரப்பிக் கொண்டு,பரணில் கிடந்த பெரிய அண்டாவைத் தன் பங்காக எடுத்துக் கொண்டு புறப்பட்டாள் சூர்யா அக்கா.

அவர்களுக்குப் பின் உஷா கிளம்பினுள். திவசத்துக்குச் செய்த பலகாரங்களைக்கூட அவள் தன் குழந்தைகளுக்கென்று மூட்டை கட்டிக் கொள்ளவில்லை.

''அப்பா என்னை ஒரு நல்ல இடத்திலே கட்டிக் கொடுத்தார். அத்தானும் நானும் குழந்தைகளும் நிறைவோடு சுகமா இருக்கோம். அது போதும்... அத்தை. ஆசி பண்ணுங்கோ... போய்ட்டு வரோம்...'' விடைபெற்றுக் கொண்டு புறப்பட்டாள்.

சகோதரிகளில் இருவரில்தான் எத்தனை வித்தியாசம்? அத்தான்கள் இருவரும்தான் எத்தனை மாறுதலானவர்கள்! அத்தையையோ சந்தியாவையோ தம்மோடு வைத்துக் காப்பாற்ற முன்வராவிடினும் அவர்களுக்கிருக்கும் ஒரு பிடி சொத்தையும் தட்டிப் பறிக்க மனமில்லாது ஒதுங்கிக் கொள்கிறார் பெரிய அத்தான். அதுவரை அவர் கண்யமானவர். கும்ரேசன் அத்தான் ஏன் இப்படிப் பிறர் சொத்துக்குப் பேயாகப் பறக்க வேண்டும்' எண்ணி எண்ணிக் குமைந்து போனுள் சந்தியா.

மறு நாள் மாலை வேலையினின்று திரும்பியதும் ஸ்நானம் செய்துவிட்டுக் கொடியில் அத்தை துவைத்துக் காயப் போட்டிருந்த பச்சை வண்ணப் பட்டுச் சேலையை உடுத்திக் கொண்டு கோயிலுக்குப் புறப்பட்டாள். திவசத்துக்கு மறுநாள் ஆங்கிலத் தேதிப்படி அப்பாவின் பிறந்த நாள்.

கோபுர வாயில் முன்னுல் அவள் நெருங்கிய போது ஒரு கணம் மெய் விதிர்த்துப்போனுள்.

யார் அது?... டாக்டர் ஸ்ரீதரன்?

லக்னே குர்த்தாவும் பட்டுக் கரை வேஷ்டியுமான அலங்காரத்தில் நெற்றியில் பட்டையாகத் திருநீற்றுக் கோடுகளுடன் மிக வித்தியாசமாகத் தெரிந்தவனை வியப்புடன் பார்த்தாள்.

'இங்கே எங்கே வந்திருக்கிறீர்?' என்று கேட்பது போல வியப்புடன் பார்த்தவளை அவனும் அதிசயமாக நிமிர்ந்து பார்த்தான்.

(தொடரும்)

**வாசகர் கருத்து**

# சுவர்ண முகி

● ஸ்ரீவேணுகோபாலன் அவர்களின் மூலம் விலையுயர்ந்த காலத்தால் என்றும் அழிக்க முடியாத ஒரு பொக்கிஷமாக எங்களுக்கு ''சுவர்ணமுகி'' எனும் சிறந்த சரித்திர நாவலைக் கிடைக்கச் செய்த 'கல்கி' இதழுக்கு என் இதய பூர்வமான வாழ்த்துக்கள்.
கும்பகோணம் பிரசன்னுராஜன்

● ஆரம்ப முதல் 42 வாரங்கள் முடிய அடுத்து என்ன நடக்கும் என்ற கேள்வியை எழுப்பிய ''சுவர்ணமுகி'' முடிவில் இப்படியா அர்ச்சனனைப் பலிகொள்ள வேண்டும்?
மாதேமங்கலம் லெ. கோபால்

● ''சுவர்ணமுகி'' கதையின் முடிவை என்னுல் கனவிலும் ஏற்றுக் கொள்ள முடியாது. ''தை'' பொங்கல் திருநாளில் ஸ்ரீ வேணுகோபாலன் வாசகர்களுக்குக் கதையை முடித்ததன் மூலம் மிகப் பெரிய தண்டனை கொடுத்துவிட்டார்கள்.
சிதம்பரம் பாலதேவசேனுபதி

● 'சுவர்ணமுகி'யின் கண்ணீர்க் கதையைப் படித்து முடித்தபோது இதயத்தில் இனம் புரியாத வேதனை நிரம்பிச் செயலற்றுப்போகச் செய்துவிட்ட உணர்ச்சிகள்தான் மிகுந்தன. சுவர்ணமுகி வாழ்ந்த பிரதேசம் வழியாகத் தான் மனித மனங்களின் சுதந்திரம், விடுதலை போன்ற தற்கால மேனுட்டு எண்ணங்கள் நமது நாட்டுக்குள் இறக்குமதி செய்யப்பட்டன என்பதைப் படித்தபோது சுவர்ணமுகியின் இலட்சியங்கள் நிறைவேறிய ஆத்ம திருப்தி ஏற்பட்டது.
தூத்துக்குடி இரணியல் 'கலை'

● நாற்பத்திரண்டு அத்தியாயங்களையும் ஒரே கதாநாயகியைச் சுற்றி மிகவும் அற்புதமாக எழுதியுள்ளார். மேலும் ஒரு வார்த்தை கூட ஆபாசமாய் எழுதாமல், விறுவிறுப்பாக எழுதிய திரு ஸ்ரீவேணுகோபாலன் பாராட்டுக்குரிய புரட்சி எழுத்தாளர்தான்.
கோவை டி. ஜி. வரலட்சுமி

● ஆரம்ப முதல் சுவர்ணமுகியே எங்களின் உள்ளங்களைப் பெரிதும் ஆக்ரமித்திருந்தாலும் கடைசியில் அர்ச்சனன் தன் தியாகத்தால் எங்களைக் கண் கலங்க வைத்து விட்டான். உன்னதமான ஒரு சரித்திர நாவலைப்படைத்த வேணுகோபாலன் அவர்களுக்குப் பாராட்டுக்கள்.
பெங்களூர் 'சித்திரப்பிரியா'

மணிகள் சிதறியது போல் கலகலவென்று சிரித்தாள் சாவித்திரி. சிரிப்புத்தான் அவள் பெற்ற செல்வம். அவளுக்குத் தனி அழகைக் கொடுப்பதே அந்தச் சிரிப்புத்தான்.

சுந்தர் மூன்று வருடங்களாகச் சாவித்திரியோடு வாழ்ந்து வருகிறான். குறைவற்ற வாழ்வில் இன்பத்தைக் காணும்போது அவள் சிரிக்கிறாள். இன்பம் வாழ்வில் நிரந்தரமாக எப்போதும் இருந்துவிடுமா?

இந்தச் சந்தேகங்கள் ஏன் வருகின்றன? தன் பலவீனத்தை மனச்சாட்சி குத்திக் கிளறுகிறதா?

வீட்டு முன் சுந்தர் ஸ்கூட்டரில் ஏறித் தயாராக நின்று கொண்டிருந்தான். சாவித்திரி புறப்பட்டு வந்து பின் சீட்டில் ஏறி அவன் தோள்களைப் பற்றிக் கொண்டாள். ஸ்கூட்டர் நகர்ந்ததும் ''நிறுத்துங்க'' என்று சாவித்திரி கத்தியதும் தரையைத் தேய்த்து நின்றது ஸ்கூட்டர்.



6

''உங்க டிபன் பாக்ஸ் எடுத்தீங்களா?''

''ஓ.... மறந்துட்டேன்.''

''கொஞ்ச நாளா எல்லாமே மறந்துடறீங்க.''

வீட்டைத் திறந்து டிபன் பாக்சை எடுத்து வந்து அவனிடம் கொடுத்தாள்.

சாவித்திரியை அவன் ஆபீஸ் முன் இறக்கி விட்டான்.

''சாயந்திரம் லேட்டாகுமா? கொஞ்ச நாளா பஸ்ஸில் போக வச்சுடறீங்க. ஆபீசில் அப்படி என்ன வேலையோ?''

சாவித்திரி ஆபீசுக்குள் போவதைப் பார்த்துக்கொண்டே நின்றான். மணி பத்தாகி விட்டது. பாங்க் போயாகணும்.

பாஸ் புத்தகம் இருக்கிறதா என்று சட்டைப் பையைத் துழாவினான். பாண்ட் பாக்கெட்டில் இருந்தது. ஸ்கூட்டர் பாங்க் நோக்கிச் சென்றது.

ஆயிரம் ரூபாய்தான் பாலன்ஸ் இருக்கிறது. எட்டாயிரம் எடுத்தாச்சு. ஆயிரம் எடுத்தால் இனிப் பாங்கில் பணம் கிடையாது.

பாஸ் புத்தகத்தைச் சாவித்திரி பார்த்து விட்டால்? மனம் திக்கென்றது. அதற்குமேல் நினைப்பை வளரவிடவில்லை. பாங்கில் பணம் வாங்கிப் பைக்குள் சென்றதும் நினைவு சிறகடித்துப் பறக்க ஆரம்பித்தது.

ஆபீசுக்கு அன்று மட்டம்தான். ஸ்கூட்டர் விரைந்து சென்றது. பொறுப்பான பதவி; ஆயிரத்துக்கு மேல் சம்பளம். ஒரு க்ஷணம் மனசில் உறுத்தியது. ஆயிரம் ஐயாயிரமாகி ஐயாயிரம் பத்தாயிரமாவது போல் ஒரு பிரமை. ஆபீஸ் மறந்து விட்டது.

ஏழு கைகள் மேஜையைச் சுற்றி அமர்ந்தன. புதுக்குளம் மைனர், பற்பல டிபார்ட்மெண்ட் அதிகாரிகள் சுந்தர் உள்பட. பஸ் கண்டக்டர், டாக்சி டிரைவர், தெருவில் பூ விற்கும் முருகன் கூட அந்த மேஜைக்கு முன் எல்லோரும் சமம்.

ஒரு மணிக்குள் ஆயிரம் அவுட். தவித்துப் போய் வெளியில் நின்றான் சுந்தர்.

''சார் பணம் வேணுமா?'' ஒரு புரோக்கர் நெருங்கினான்.

''கிடைக்குமா?''

''என் கூட வாங்க.''

கடன் பொறிக்குள் மாட்ட வேண்டிய தருணம் வந்து விட்டது. புரோக்கர் பின் சென்றான். குப்பை மேடுகளை மிதித்துக் கொசுக்கள் ஆடும் சாக்கடைகளைத் தாண்டி அந்த ஓலைப் பறை வீட்டின் முன் நின்ற போது எவ்வளவு கீழே இறங்கி விட்டோம் என்பதை நினைத்தான்.

''அண்ணே.... அண்ணே....!''

கட்டம் போட்ட கைலியைத் தொப்புள் தெரிய மடித்துக் கட்டிக் கொண்டு கிருதா மீசையுடன் வந்த அவன்! ஒன்றாம் நம்பர் ரௌடி. இவனிடம் கடன் வாங்குவதா? கேவலம்.

''சாருக்கு மூவாயிரம் ரூபா பணம் வேணும்.''

''யோவ்! நீ எங்கய்யா வேலை செய்யறே?'' அவன் பாஷை, அளிக்கும் மரியாதை அப்படித்தான்.

''சார் பெரிய ஆபீசர்.''

''வட்டி ஒழுங்காத் தருவியா? மூவாயிரத்துக்கு முந்நூறு எடுத்துக்கிட்டுத் தருவேன். ராத்திரியே பணம் வந்து சேரணும்.

படம்: அவதார் நடிப்பு: ராஜேஷ்கன்னா

இல்லேன்னு பணம் தர்ற வரைக்கும் தெனம் முந்நூறு ரூபாய் வட்டி தரணும். சம்மதமா?''

வட்டியின் கடுமையை நினைத்து அவன் தயங்கியபோது ''அதெல்லாம் தந்துடுவாரு.'' என்று முடித்து விட்டான் புரோக்கர். எப்படியும் பணம் கைக்குக் கிடைத்தால் போதும் என்ற வெறியில் அவன் அலட்சியமாகக் கொடுத்த பணத்தைப் பணிவோடு வாங்கிக் கொண்டான்.

மடியில் கனம் இருக்கிற சூட்டில் 'பெட்' விறுவிறுப்பாக உயர்ந்து கொண்டே போயிற்று. முடிந்து எழும்போது பன்னிரண்டு மணி. ஆட்டம் ஓய்ந்தது போல் அவன் ஆட்டமும் ஓய்ந்தது.

மூவாயிரம் எப்படிச் சமாளிக்கிறது? ஸ்கூட்டரை விற்றுவிடலாமா? சாவித்திரிக்குத் தெரிந்து விடுமே! நிம்மதி இழந்து இரண்டு நாட்கள் வீட்டிலே கிடந்தான். வட்டி விசுவரூபம் எடுத்துக் கண் முன் நின்றது.

வட்டிக்காரன் ஆபீசுக்கே வந்துவிட்டான்.

''யோவ்! ஆபீசுக்குள்ளேயே ஒளிஞ்சுக்கிட்டியா? வெளியே வாய்யா!''

மேல் மட்ட அதிகாரியை எவனோ வெண்டிப் பயல் கொச்சையாய்ப் பேசுவதைக் கேட்டு ஊழியர்கள் திகைத்தார்கள். சுந்தர் விருட்டென்று எழுந்து அவனை வெளியே அழைத்துச் சென்றான்.

வீட்டுக்கு வந்து பீரோவைத் திறந்தான். சாவித்திரி தன் சம்பளத்தைச் சேமித்துஆசையாய் வாங்கிய டாலர் செயின், ஐந்து பவுன், துணிவோடு எடுத்து வந்து விட்டான்.

கடன் தீர்ந்தது. இனிக் கிளப் பக்கம் தலை வச்சுப் படுக்கக் கூடாது. சாவித்திரிக்குத் தெரியாமல் சங்கிலியை மீட்டு வச்சுடணும்.

சாவித்திரி ஒரு பிறந்த தின விழாவுக்குப் போக ஆபீசிலிருந்து முன்னதாக வீட்டுக்கு வந்தாள். செயின் பாக்சை எடுத்துத் திறந்தாள். செயின் எங்கே?

# சாவித்திரி (அ) சீர்திருந்தியவன்

எம்.கே.சங்கரன்

சுந்தர் ஆபீஸ் பியூன் செய்தியை சாவித்திரியின்காதில் போடவென்றே அவளைத் தேடி வந்தான்.

''அம்மா, நம்ம சார் சூதாடி இருபதாயிரம் தோத்துட்டாராம். ஒரு காலிப் பயகிட்டக் கடன் வாங்கி இன்னைக்கு அவன் ஆபீஸுக்கு வந்து ரகளை பண்ணிவிட்டான். எப்படியோ அவனுக்குப் பணம் கொடுத்துட்டார். நீங்கஜாக்கிரதையாஇருக்கணும்.'' எச்சரித்துவிட்டுப் போனான். மனம் இடிந்து உட்கார்ந்து விட்டாள் சாவித்திரி.

நடு நிசி.

''டொக் டொக்''

''சாவித்திரி, யாரோ கதவைத் தட்டறாங்க.''

அவள் எழுந்து சென்று கதவைத் திறந்தாள். மறு கணம் வீலென்று அலறினாள்.

தலை முழுவதும் ரப்பர் உறையால் மூடப்பட்ட உருவம். சாவித்திரியின் மார்பில்கத்தியைப் பதித்தவாறு அவளைத் தள்ளிக்கொண்டு வந்தது. சுந்தர்செய்வதறியாது திகைத்தான்.

''பீரோ சாவியை எடு.''

சாவித்திரி சாவியைக் கொடுத்தாள்.

பீரோவைத் திறந்து செயின் பாக்ஸை எடுத்துப் பாண்ட் பாக்கெட்டில் போட்டான். முகமூடியே எதிர்பார்க்கவில்லை. சுந்தர் மப்பாய் மேலிருந்த பால் செம்பை விரைந்தெடுத்து முகமூடி மீது வீசி எறிந்தான். கத்தி பிடி நழுவி தூர விழுந்தது. சுந்தர் பாய்ந்துஓடிப்போய் அவன்சட்டையை நெஞ்சோடு பிடித்து இழுத்து வெளிச்சத்துக்கு வந்தான்.

ரப்பர் உறையில் அழுத்தப்பட்ட அந்த முகத்தின் அடையாளம் தெரிந்தது. திகைப்படைந்த தருணம் சுந்தரைத் தட்டிவிட்டு முகமூடி ஓடிவிட்டான்.

''செயின் போச்சே!'' சாவித்திரி அலறினாள்.

சுந்தர் சாவித்திரியை நிமிர்ந்து பார்க்கக் கூசினான்.

மறுநாள் ஸ்கூட்டரை விற்றுச் சாவித்திரியின் செயினை மீட்டுக் கொண்டு வந்து அவளிடம் கொடுத்தான்.

''நேற்று திருடு போச்சே... எப்படி!''

''சாவித்திரி! திருடன் நான்தான். சூதாடினேன். உன் செயினைக் களவாடினேன். எல்லாம் உனக்குத் தெரிந்திருந்தும் உன் அண்ணனுக்கு முகமூடி போட்டு செயின்கொள்ளை போகிற மாதிரி ஜோடனை செய்தாயே, என்னை நீ நல்லவனுக்கணுமா? சரியான தண்டனை தந்திருக்கணும்.''

''திருடினதாச் சொல்லாதீங்க. என் கணவரைத் திருடனாக் கற்பனை பண்ண என்னால் முடியாது. என் உடைமைகள் எல்லாம் உங்களுக்குப் பாத்தியப் பட்டதுதான். உங்க சிக்கல் தீர்றதுக்கு என் சங்கிலி பயன்பட்டது பாக்கியமாகவே நினைக்கிறேன். நாம் உடல் உழைச்சுச் சம்பாதிச்ச பொருள் வீண் விரயமாகி விடக்கூடாது என்கிறதை நீங்க புரிஞ்சுக்கிட்டாப் போதும்.''

அவள் பெருந்தன்மைக்கு முன் தன் ஈனச் செய்கைகளை எண்ணித் தலை தாழ்ந்துநின்றான் சுந்தர்.

# எனக்கும் ஒரு நண்பன் இருக்கிறான்

"இரண்டாவது மகா யுத்தம் வராமல் இருந்திருந்தால் நான் வேறு ஏதாவது துறைக்குப் போய்விட்டிருப்பேன். நிறையப் படித்துப் பட்டம் வாங்கிக் காலேஜில் லெக்சரர் ஆகியிருக்கலாம். இன்றைக்கு உட்கார்ந்துகொண்டு ஏற்றுமதி இறக்குமதி பற்றிப் பேசிக் கொண்டிருக்க மாட்டேன்...''

என்று கூறி முடிப்பதற்குள் மற்றொரு போன் கிணு கிணுக்கிறது. இடைவிடாத போன்களும், புள்ளி விவரங்களும், ஆட்கள் வருவதும் போவதும் என மிகவும் 'பிஸி'யான பிஸினஸ் மேன் திரு அகமத் முகமது.

ஏராளமான பணம் புரளும் வியாபாரத்தில் ஈடுபட்டு இருக்கிறார். இப்பொழுது இந்தியாவின் புகழ் பெற்ற தொழில்,'ரெடிமேட்' உடைகளை ஏற்றுமதி செய்வதுதான். அதில் இரண்டு தொழிற்சாலைகளை, புகழ்பெற்ற கிண்டி தொழிற்பேட்டையில் வைத்து ஏற்றுமதி வியாபாரம் செய்கிறார் என்று சொன்னாலே போதுமே, அவருடைய வியாபாரத்தைப் பற்றி.

இந்த வளர்ச்சியின் பின்னணி என்ன?

''மிகச் சாதாரணம்தான். சாதாரண வியாபாரத் தொழிலாகத்தான் ஆரம்பித்தேன். மதுரையில் என்னுடைய தாத்தா, அப்பா எல்லாம் துணி வியாபாரத்தில் ஈடுபட்டு இருந்தார்கள். படிக்க வேண்டும் என்கிற ஆசை எனக்கு. மதுரையில் எஸ்.எஸ்.எல்.சி. முடித்துவிட்டு, சென்னை மாநிலக் கல்லூரியில் சேர்ந்தேன். அந்தச் சமயத்தில்தான் இரண்டாம் உலகப் போர் காரணமாக சென்னையில் 'அணுகுண்டு பயம்' எழுந்தது. நானும் குண்டுக்குப் பயந்து படிப்பை விட்டு விட்டு ஓடினேன். அதனால்தான் முதலில் சொன்னேன்,இந்தயுத்தம் வரவில்லையென்றால் என் வாழ்க்கை வேறு மாதிரியாக ஆகியிருக்கும் என்று.''

தன்னுடைய வேலைகளை இடையிடையே கவனித்துக் கொண்டே தொடருகிறார் முகமது.

''என் எதிர்காலத்துக்காகப் பரம்பரைத் தொழிலையே மேற்கொண்டேன். முதலில் சாதாரண துணி வியாபாரமாகத்தான் ஆரம்பித்தேன். வியாபாரத்தில் பணம் புரள வேண்டுமே; அதற்குப் பணம் வேண்டுமே! அந்தச் சமயத்தில்தான் யாரோ சொன்னார்கள், கனரா பாங்க் இது போலத் தொழில்களுக்கு ஊக்கம் கொடுக்குமென்று. நான் அவர்களின் உதவியை நாடினேன். அன்றைக்கு ஆரம்பித்த நட்புதான் இது.

''உடுக்கை இழந்தவன் கைபோல உதவி செய்பவன்தான் நண்பன். என்னுடைய அப்படிப்பட்ட நண்பன் கனரா பாங்க்தான். இந்த வியாபாரத்தில் எத்தனை இடைஞ்சல்கள், எத்தனை சிக்கல்கள். அத்தனையையும் களைந்து, எனக்கு உற்ற தோழனாக உதவி புரிந்தது.

இன்றைக்கு என்னுடைய வியாபாரத்தைப் பார்க்கும்போது, அன்றைக்கு வியாபாரம் நூற்றில் 5 பங்குதான். வெறும் 5 சதவீதம்! அன்றைக்கு நாடு முழுவதிலும் இருந்து ஏற்றுமதியான துணிகள் 17 கோடிதான். இன்றைக்கு 600 கோடிக்கு ஏற்றுமதியாகிறது என்றாலே, இந்த வியாபாரத்தின் வளர்ச்சியை நீங்கள் புரிந்துகொள்வீர்கள்.

இதனுடனே நானும் படிப்படியாக வளர்ச்சியடைந்தேன். புகழ்பெற்ற கம்பெனிகளின் துணிகளை வாங்கி விற்றேன். என்னுடைய வியாபாரம் பெருக ஆரம்பித்தது. நானும் கனரா பாங்கில் கடன் வாங்கினேன். அக்கவுண்ட்டும் ஆரம்பித்தேன்.

பிறகு வெளி நாடுகளுக்குத் துணிகளை ஏற்றுமதி செய்யும் வியாபாரம்

நன்கு நடைபெறும் எனப்புரிந்துகொண்டேன். அதைச் சொல்லி அரசாங்கத்திடம் விண்ணப்பித்தேன், எனக்குக் கிண்டியில் இது தொடர்பான தொழிற்சாலை ஒன்று தொடங்க இடம் வேண்டுமென்று.

''இந்தச் சமயத்தில் அரசாங்கம் எனக்குக் கொடுத்த ஆதரவைத்தான் வாழ்நாளில் என்னால் மறக்கவே முடியாது. தொழிற்சாலை தொடங்குவதற்கு கால் பங்கு பணம்தான் என்னிடம் இருந்தது. முக்கால்வாசிப் பணத்தைக் கனரா பாங்க் தந்தது. தொழில் துறை வளர்ச்சியடைய வேண்டும் என்ற நோக்கில் அது உடனடியாக எனக்கு உதவி செய்தது.

அவர்களின் பெரும் உதவியோடு 25 பேர்கள் வேலை செய்யும் தொழிற்சாலையாகத்தான் 1976ல் ஆரம்பித்தேன். ஆறு ஆண்டுகளுக்குப் பின் இன்றைக்கு 80 பெண்கள் அங்கு வேலை செய்கிறார்கள். இரண்டு தொழிற்சாலைகள் இயங்குகின்றன.




இங்கு நான் மட்டும் வளர்ச்சியடையவில்லை. இது அன்னியச் செலாவணியைப் பெருக்கும் தொழில்; சமுதாயத்தில் பலருக்கு வேலை வாய்ப்பைத் தரும் தொழில்; மேலும் பல தொழில்களுடன் இணைந்து வளரும் தொழில். இப்படிப் பல பயன்களையும் தருவதை மனதில் கொண்டே உடனடியாக எனக்கு உதவி செய்தது கனரா பாங்க்.

''சமுதாய வளர்ச்சிக்கு எப்போதும் ஒரு கரம் கொடுக்கும் வங்கியாக கனரா பாங்க் இருக்கிறதே என்று ஆச்சரியப்படுவேன் நான். அது எனக்கு ஒரு வங்கியாகவே தோன்றுவதில்லை. எனக்கு ஏதாவது பிரச்னை என்றால் ஆலோசனைக்காக ஓடுவேன்; அங்கு யாராவது பதவி உயர்வு பெற்றால் வாழ்த்துச் சொல்லுவேன். ஏன், மேல் நாடுகளுடன் வியாபாரம் பற்றி ஒன்றுமே தெரியாமல் இருந்தவன் நான். பண விவகாரங்களில் டாலரில் வாங்குவது, கொடுப்பது போன்ற நாணய மாற்றுக்களைச் செய்ய ஆலோசனை வழங்கி எனக்கு அறிவுரை தந்ததே அந்த வங்கிதான்.

''எத்தனையோபேர் என்னைக்கேட்டிருக்கிறார்கள், நீங்கள் ஏன் ஒரே பாங்கில் கணக்கு வைத்திருக்கிறீர்கள் என்று. ஆனால் எனக்கு அந்த நினைப்பே எழுந்ததில்லை. ஏனென்றால், எப்பொழுது நம் தேவைகள் பூர்த்தி செய்யப்படாமல் போகிறதோ, எப்பொழுது நமக்கு ஒன்றைப் பற்றிய அதிருப்தி ஏற்படுகிறதோ அப்பொழுதுதான் வேறொன்றைப் பற்றிய நினைப்பே எழும். கனரா பாங்கைப் பொருத்தவரை எனக்குப் பிரச்னையே இல்லாதபோது, நான் ஏன் வேறொன்றைப் பற்றி யோசிக்க வேண்டும்?

'Serving to grow-growing to serve' என்பது தானே அதனுடைய தாரக மந்திரமும் கூட. இந்த எழுபத்தைந்து ஆண்டுகளில் கனரா பாங்கும் வளர்ந்தது. கனரா பாங்குடன் என்னைப் போலப் பலரும் வளர்ந்திருக்கிறார்கள்.''

ADVT




● தலைவர்கள் அளித்த வர்ணனையில் வாரி யார் அளித்த வர்ணனைதான் ஏ ஒன்! இப்போது நினைத்தாலும் சிரிப்பு வருகிறது! முருகா! கார்த்திகேயா! கடம்பா! விசிட்டர் அனைத் இது போலச் சுவையாகப் பல வற்றை இன்னும் எழுத ஆசி வழங்கு!
மதுரை ஆர். வி. பிரசாத்

● பொங்கல் சிறப்பிதழில் லக்ஷ்மியின் சாதா ரண மனிதனும், ஜெயந்தனின் இனியும் மிக விறுவிறுப்பாகத் தொடங்கியுள்ளன. ஜெயந் தனின் ''இனி'' பல வாசகர்களுக்கு காண்ட்ர வர்ஸியாக அமையும் என நம்புகிறேன். நெடு நாட்களுக்குப் பிறகு அத்தகையதொரு தொடரைப் படிப்பதில் மகிழ்ச்சி கொள் கிறேன்.
செங்கவல்லி கி. முருகவேள்

●'கிரிக்கெட் ஒழிக்கப்பட வேண்டும்' என்ற திரு பகீரதன் அவர்களின் வார்த்தைகள் மிகவும் வரவேற்கத் தக்கதாகும். வீட்டுப் பெண்மணிகள் கூட தங்கள் குடும்பக் கடமை களை மறந்துவிட்டுச் சிவலிங்கத்தைக் கட்டிக் கொண்ட மார்க்கண்டேயன் மாதிரி ரேடியோ டீ.வியில் காமெண்டரி கேட்கும் வயிற் றெரிச்சல் ஒழிந்தால்தான் நாடு முன்னேற முடியும்.
கும்பகோணம் கே. ரகுபதி

● பகீரதனுக்கு ஒன்று கூற விரும்புகிறேன். இரண்டு நாடுகளுக்கிடையே நட்புணர்வினைப் பலப்படுத்துவது விளையாட்டு. அந்த நோக் கில், இந்தியாவுக்கும், பாகிஸ்தானுக்கும் நட்பு பாலமாக இருப்பது கிரிக்கெட்தான். 78ல் இந்தியா கிரிக்கெட் குழு சென்று விளை யாடிய பிறகு ஜியா கூறியது. ''இரு நாடு களுக்கும் புதுப் பாலம் அமைக்க இது துணை யாக இருந்தது.''
பெருங்களத்தூர் எல். ரவிசங்கர்

● இந்த வாரம் தலையங்கம் மகா மட்டம். சரியான கோழை ஐயா நீர். ஆளும் கட்சிக்குச் சாதகமாகவே எப்பொழுதும் எழுத வேண் டும். அவர்கள் செய்வது சரி, எதிர்க் கட்சிகள் செய்வது சதி என்று எப்பொழுதும் எழுதத் தெரியாத நீர் இனி தலையங்கம் எழுதாதீர்!
விழுப்புரம் கே. எஸ். குமார்

● அட்டையில்தான் பொங்கல் கிரிக்கெட் சிறப்பிதழ் என்று பெயர். பொங்கல் திருநா ளைப் பற்றி ஒரு வார்த்தை அட்லீஸ்ட் ஒரு துணுக்கு. அதுவும் வேண்டாம், வாசகர்களுக்கு பொங்கல் வாழ்த்துக்கள் என்ற வரி, எதுவுமே இல்லை. பேசாமல் கிரிக்கெட் சிறப்பிதழ் என்று வெளியிட்டிருக்க வேண்டியதுதானே?
உடுமலைப்பேட்டை சாகுல் அமீது

● நம்பிக்கை அளிக்கும் விதத்தில் தலையங் கம் வேண்டுமென ஒரு அன்பர் கேட்டாலும் கேட்டார்: பலவித ''நம்பிக்கை''களை உள் ளடக்கித் தந்துவிட்டீர்கள்! இனி அந்த அன்பர் மண்டையைப் பிய்த்துக் கொள்ளா மல் இருந்தால் சரி!
திருவல்லிக்கேணி கே. டி. ராஜன்

● திரு கே. பாக்யராஜ் அவர்களுக்கு சிறந்த முறையில் சீரியஸாகவும் நாவல் எழுதத் தெரி யும் என்பதை ''கங்கையில் நெருப்பு'' எனும் அவரது முழுநீள நாவல் நிரூபித்துவிட்டது. கதையின் முடிவும் அதற்கேற்றாற்போல்! கதைக்குக் கொடுக்கப்பட்ட தலைப்பும் அபாரம்.
ஈரோடு மேஜர் தாசன்

● கிரனின் ''இலக்கியத்தில் இறையுணர் வி''ன் ஆரம்ப வரிகளிலேயே அதன் மணத்தை அனுபவித்தேன். தொடரட்டும் அது....! வளர்க்கட்டும் மனத்தில் இனிய இறையுணர்வுகளை....!
நயினாரகரம் முத்து

● அமரர் கல்கியின் பாணியைப் பின்பற்றி ''அரிசிலாற்றின் அமைதியும் கம்பீரமும்...' என்ற வரிகளைக் கொண்டு செம்பியனின் 'ரவிகுல திலகன்' என்ற சரித்திர நவீனம் ஆரம்பித்தது குறித்து எனது மனம் ஆனந் தப் பள்ளுப் பாட ஆரம்பித்து விட்டது.
சிறுமுகை திரிபுராந்தக தயாபரன்

● அன்புடன்தான் வம்பு செய்கிறீர்கள் என் றாலும் எங்கள் ''சாந்திநிகேதன்'' நாடகக் குழுவைப் பற்றிய செய்தியைக் கண்டு ஆச் சரியமும் அதிர்ச்சியும் அடைந்தோம். மறைந்த டி. எஸ். சேஷாத்திரி தலைமையில் ஒரு குடும்பமாக வளர்ந்துவிட்ட எங்களது குழுவில் மன வேறுபாடோ, பிரிவினை எண் ணமோ எள்ளளவும் இல்லை.

சாந்திநிகேதனில் வளர்ந்தவர்கள், மனச் சாட்சியை விற்றுவிட்டு, வேறு நாடகக் குழுவை ஆரம்பிக்க மாட்டார்கள்.
சென்னை-24 பி.எஸ். பத்மநாபன். காரியதரிசி

# அவர்க்கே உரியது நான்

தீரன்



சைவப் பயிர் தழைக்க வந்த சான்றோர்களுள் திருநாவுக்கரசர் தொண்டு நெறியே சமயம் என உணர்த்தியவர். இறைவன் பால் இடையறாத பேரன்பு: பக்தியால் நீர் பொழியும் கண்கள்: உழவாரத்தின் படை ஏந்திய கரம்: ஒழுக்கம் மாறாத துறவு: இவற்றின் திருவடிவு திருநாவுக்கரசர்.

திருநாவுக்கரசரை எண்ணும்போது அவர் தமக்கை திலகவதியாரின் தியாகமே முன் நிற்கும். பல்வேறு வாழ்க்கைத் துன்பங்களைச் சுமந்துகொண்டு அந்த அம்மையார் தியாக வாழ்வு வாழ்ந்திரா விட்டால் நமக்குத் திருநாவுக்கரசர் கிடைத்திருக்க மாட்டார்.

அடியவர் வரலாற்றை அருந் தமிழில் உணர்த்திய சேக்கிழார் சுவாமிகள் தன் பெரிய புராணத்தில் திருநாவுக்கரசரைச் சைவ உலகுக்குத் தந்த திலகவதியாரின் தியாகத்தைச் சுட்டிச் சொல்லும் பாங்கு மிக்க ஒரு பாடல் எண்ணி எண்ணி இன்புறத் தக்கது.

## இலக்கியத்தில் இறையுணர்வு



திருவாமூரில் புகழனார் – மாதினியார் என்ற தம்பதியருக்குத் திலகவதி மூத்தமகளாகப் பிறந்தார். சில ஆண்டு சென்றதன் பின்னர் மருள்நீக்கியார் என்பவர் பிறந்தார். அவரே பிற்காலத்துத் திருநாவுக்கரசர் என விளங்கியவர்.

திலகவதியார் வாழ்க்கையில் தான் எத்தனை சோதனை!

புகழனார்–மாதினியார் இருவரும், திலகவதிக்குத் திருமணம் முடிக்க எண்ணிக் கலிப்பகையார் என்பவரை மணமகனாகத் தேர்ந்தெடுத்து நிச்சயித்தனர். கலிப்பகையார் தளபதி.

நிச்சயதாம்பூலம் ஆயிற்று.

திருமணம் நடப்பதற்குள் போர் ஏற்பட்டு விட்டதால் தளபதி கலிப்பகையார் – மணமகன் – படை நடத்திச் சென்றுவிட்டார்.

போர் முடிந்து திரும்பிய பிறகுதானே திருமணம்!

ஆனால்....

அதற்குள் திலகவதியார் பெற்றோர் இருவரும் இறந்தனர்.

திலகவதி தன்னைக் காத்துக் கொள்வதுடன் தம்பியையும் காக்க வேண்டும்.

போர் முடிந்து கலிப்பகையார் திரும்பிய பின் திருமணத்தை முடித்துக் கொண்டால் தம்பியைக் காப்பாற்றுவது எளிதுதான்!

நாம் நினைப்பது போல் எது நடக்கிறது?

போர் மேல் சென்ற கலிப்பகையார் இறந்தார்!

திலவதியார் என்ன செய்வார்?

இனி அவர் உயிர் வாழ விரும்பவில்லை. அக்கினிப் பிரவேசம் செய்து உயிர் துறக்க முடிவு செய்து விட்டார்! அவர் முயற்சியை உறவினர்கள் தடுத்தனர்!

தன்னைத் தடுக்க வேண்டாம் என உறவினரிடம் திலகவதியார் உரைப்பதாகக் கருத்தமைந்த சேக்கிழார் பாடல் அற்புதமானது!

திலகவதியார் உறவினர்களிடம் ''என் தந்தையும் தாயும் அவர்க்கு (கலிப்பகையார்க்கு) என்னைக் கொடுக்க இசைந்தனர். அந்த முறையால் அவர்க்கே உரியது நான். ஆதலினால் இந்த உயிரை அவருயிரோடு இசைவிப்பேன். என்னைத் தடுக்காதீர்'' எனக் கூறினார்.

இக்கருத்தை வெளிப்படுத்தும் பாடலைப் பாருங்கள்:

''எந்தையும் எம்அன்னையும் அவர்க்கு
எனைக் கொடுக்க இசைந்தார்கள் அந்த
முறையால் அவர்க்கே உரியது





















நான் ஆதலினால்
இந்த உயிர் அவருயிரோடு இசை
விப்பன் எனத் துணிய
வந்தவர் தம் அடியிணை மேல்
மருணீக் கியார் விழுந்தார்''

திலகவதியார் கூறுவதாக அமைந்த இப் பாடலில், தான் கலிப்பகையாருக்கு வாழ்க்கைத் துணைவியாக நிச்சயிக்கப்பட்டு விட்டதால், தான் அவருக்கே உரியவள் ஆகிவிட்டதைத் தெரிவிக்கிறார். அதற்குத் திலகவதியார் கூறும் சொற்கள் என்ன? ''அவர்க்கே உரியது நான்'' என்பது.

'அவர்க்கே உரியது நான்' என்ற தொடர் சரியா? 'அவர்க்கே உரியவள் நான்' என்றல்லவா இருக்க வேண்டும்? நான் என்பது உயர்திணை; உரியது என்பது அஃறிணை. மக்கள் மட்டுமே உயர்திணை; மற்றைய உயிர்கள் அஃறிணை.

உயர்திணைக்கு அஃறிணை முடிவைச் சேர்க்கக் கூடாதே! மனிதன் நடந்தான்; மாடு நடந்தது எனக் கூற வேண்டும். மனிதன் நடந்தது; மாடு நடந்தான் என வருமா?

சேக்கிழார் திலகவதியார் 'அவர்க்கே உரியது நான்' எனக் கூறுவதாக எழுதியதில் என்ன மாற்றம் செய்துள்ளார்? உயர்திணையாகிய 'நான்' என்பதை 'உரியது' என்ற அஃறிணையாக ஆக்கிவிட்டார்.

உயர்திணையை அஃறிணையாக்குவது எப்போது?

உயிர் போன பிறகு: அதுதானே உலக வழக்கம்.

ஒருவர் உயிரோடு இருக்கும்வரை அவர், இவர் என்று உயர்திணைச் சொற்களால் கூறுகிறோம். உயிர் போய்விட்டால் 'எடுத்தாகி விட்டதா?' என்று அஃறிணையாக்கி விடுகிறோம்.

என்றால் திலகவதியார் உடம்பிலிருந்து உயிர் போய்விட்டதா? இல்லையே! பிறகு எப்படி 'உரியவள்' என்பதை 'உரியது' என்று அஃறிணை ஆக்கினார்?

எல்லோரும் உடம்பில் ஓடும் மூச்சுக் காற்றைத்தான் 'உயிர்' என்று அழைப்போம். ஆனால் திலகவதியார் தன்னுடம்பில் உள்ள சுவாசத்தை உயிராகக் கருதவில்லை. தனக்காகப் பேசப்பெற்ற கலிப்பகையாரையே உயிராகக் கருதினார். அவர் போய்விட்டதால் தன் உயிர் போய்விட்டது. அதனால் உரியவள் 'உரியது' ஆகிவிட்டது!

சேக்கிழார் திறமைதான் எவ்வளவு!

உயர்திணைக்கு அஃறிணையும், ஒருமைக்குப் பன்மையும் போடுவது விழுமிய நடைக்கு உதாரணம் என கி.மு. 2ம் நூற்றாண்டில் வாழ்ந்த கிரேக்கப் பேராசிரியன் லாங்கினஸ் (Longinus) குறிப்பிட்டான். பல உதாரணங்களையும் காட்டியுள்ளான்.

சேக்கிழார் கம்பீரம் அதற்றில் இல்லை!

# அடுத்த வாரிசு

● ஏ. வி. எம். பேனரில் கேப்டன் எஸ்.பி. முத்துராமன் டிரா செய்துவிட்ட டெஸ்ட். ரஜனி இரண்டு முறை பேட் செய்கிறார். டபுள் ஆக்ட். என்ஜினீயர் ரமேஷ் வேடத்தில் டக் அடித்தாலும் போக்கிரி ராஜா வேடத்தில் அரை செஞ்சுரியைத் தாண்டுகிறார். காதல் குறும்பு, சண்டையில் வேகம் போன்ற ஸ்கொயர்கட்டும், ஹூக் ஷாட்டும் ரஜனிக்கே உரித்தானவை. எதிரில் பார்ட்னர் ஸ்ரீதேவி அழகாய் ஸ்டேண்ட் கொடுக்க ரன் எடுக்காமலேயே கலகலப்பாய் ஆடுகிறார். போக்கிரி ராஜாவுக்கு ஸ்டேண்ட் தரும் ராதிகா போக்கிரி ராணி. மகா துடுக்குடன் தனக்கே உரிய மழலைப் பேச்சில் ஸ்வீப் செய்கிறார். ரசிகர்களின் வேண்டுகோளுக்கிணங்க ஸ்டைல் விக்ஸர்களும் ரஜனி தருகிறார்.

எஸ். பி. முத்துராமன் மேட்சை டிரா செய்யும் எண்ணத்துடனேயே கதையை, பழைய வாடிக்கையான மசாலாப் பிட்ச் சாகத் தயாரித்திருக்கிறார்.

இதுவரை பேட்டிங்கில் மட்டும் சிறந்திருந்த முத்துராமனை வில்லனுக்கி பௌலிங் செய்யவும் தயார்ப்படுத்தி விருக்கிறார்கள். இது அவருக்குக் கடைசி டெஸ்ட்டாகப் போனது ரசிகர்களுக்கு இழப்புத்தான்.

எம். எஸ். விஸ்வநாதன் நிஜேலில் நிற்கிறாற் போல நாலு ஷாட் அடிக்கிறார். ஒளிப்பதிவாளர் பாபுவும் முடிந்தவரை உதவுகிறார்.

ஸ்கோர் போர்ட்:

| | |
|---|---|
| ரஜனி (ரமேஷ்) (காட்) | 0 |
| ரஜனி (ராஜா) (பேட்டிங்) | 51 |
| ராதிகா (பேட்டிங்) | 54 |
| ஸ்ரீதேவி (காட்) | 32 |
| எஸ்.பி. முத்துராமன் (ஹிட்விக்கட்) | 22 |
| எம். எஸ். வி. (காட்) | 45 |
| பாபு (காட்) | 45 |
| 5 விக்கெட் நஷ்டத்துக்கு | 249 |

— நளினி சாஸ்திரி





# பொக்கிஷம்

தலைவர்கள் அன்பு ஆணைகளாக எனக்கு எழுதிய கடிதங்கள் முக்கியமானவையே. அதைப் போலவே கட்சியின் மீது அளவிலாப் பற்றுக் கொண்டு அதனை வளர்ப்பது பற்றியும், அதன் மூலம் நாட்டை வளப்படுத்துவது பற்றியும் சதா சிந்தித்துச் செயல்படும் தோழர்கள் எழுதும் கடிதங்களும் எனக்கு ஊக்கமளித்து வழிகாட்டுவனவாக அமைகின்றன. சான்றுக்கு இதோ தோழர் துரைராஜ் அவர்கள் எழுதிய கடிதம்:

(குமரி அனந்தன்)

அன்புமிக்க தலைவருக்குக் கன்னங்குளம் துரைராஜ் வணக்கமாய் எழுதிக் கொள்வது:

மணியாச்சி ரயில்வே ஸ்டேஷனுக்கு வாஞ்சியின் பெயரைச் சூட்ட வேண்டும் என்ற போராட்டத்தின்போது தாங்கள் கைது செய்யப்பட்டபோது தங்களைப் பார்த்துப் பேசினேன். ஆனால் தங்களைத் தமிழ்நாடு அரசு விடுதலை செய்த செய்தியை பம்பாய் வந்ததும் கேள்விப்பட்டு மகிழ்ச்சி அடைந்தேன். ஆனால் உண்மையான மகிழ்ச்சி தங்களின் கோரிக்கை நிறைவேறும் நாளன்று தான் ஏற்படும் எனக்கு.

விலைவாசி உயர்வுக்குப் போராட்டம் நடத்திய அமரர் பெருந்தலைவர் பாதையிலே தாங்களும் போராட்டம் நடத்த வேண்டும். எத்தனையோ பேர் பிரிந்து செல்லட்டும். சென்றவர் வருந்தும் நாள் உண்டு. காலம் கனியும். கடமை தொடரட்டும். ''கடமையைச் செய் பிரதிபலனை எதிர்பார்க்காதே'' என்ற கீதையின் வாக்குப்படி தங்களின் தேசியப் பணி தொடரட்டும். போற்றுவார் போற்றட்டும். தூற்றுவார் தூற்றட்டும். என்போன்ற லட்சக் கணக்கான தொண்டர்களின் மத்தியிலே உங்கள் நினைவு இருந்து கொண்டே இருக்கிறது.

தாங்கள் தொகுதி மக்களின் குறைகளைக் கேட்டு அவர்களிடம் பாசத்தோடு அணுகுவதை ஒரு பத்திரிகை வெளியிட்டு இருந்தது. அதைப் படித்த என் உள்ளம் எவ்வளவு ஆனந்தப்பட்டது! நமது கட்சி வளர ஒருசில முறைகளை நமது சட்ட மன்ற உறுப்பினர்கள் பின்பற்ற வேண்டியது நிச்சயம். என் வேண்டுகோளைப் பரிசீலிப்பீர்கள் என்று நம்புகிறேன்.

சட்ட மன்றக் கூட்டம் முடிந்ததும் நமது சட்ட மன்ற உறுப்பினர்கள் தொகுதி முழுவதும் வருடத்துக்கு ஒரு முறை (குறைந்த பட்சம்) சுற்றுப் பயணம் செய்து மக்களோடு நெருங்கிப் பழகி, அவர்களின் குறைகளைக் கேட்டு, நிவர்த்தி செய்யும் பணியில் அதிகாரிகளைக் கலந்து தகுந்த பதிலை உரியவர்களுக்குத் தக்க சமயத்தில் தெரிவிப்பதன் மூலம் தங்களின் பணிகளைச் சிறப்பாகச் செய்ய முடியும்.

நான் ஒரு சட்ட மன்ற உறுப்பினர் என்ற அகந்தை நம் கட்சி உறுப்பினர்களுக்கு இல்லாதது நாம் செய்த புண்ணியம்.

எனவே, தாங்கள் நம் உறுப்பினர்களுக்கு இது பற்றிய சுற்றறிக்கை அனுப்ப வேண்டும்.

தமிழ் நாட்டில் உள்ள தேசியக் கட்சிகள் சிதறிக் கிடக்கின்றன. ஒன்று சேர்ந்தால் பிரிவினை மனப்பான்மை உடைய திராவிடக் கட்சிகள் இருக்கும் இடம் இல்லாமல் ஆக்கிவிடலாம்.

இந்திய நாட்டின் பொருளாதார நிலைமை மிகவும் கீழ் நோக்கிச் சென்று கொண்டிருப்பதை நினைத்து வேதனைப் படுகிறேன். ஏற்கெனவே 4 பில்லியன் கடன் உள்ள நிலையில் மேலும் 5.69 பில்லியன் கடன் வாங்கி இந்திய அரசாங்கம் அந்தப் பணத்தை நேர்மையான முறையில் செலவழிக்காமல், அரசாங்க நிகழ்ச்சிகளுக்கும், அனாவசியமான இனங்களுக்கும் செலவிடுவதை என் போன்றோரின் மனம் நினைத்து வேதனைப் படுகிறது. எனவே பாரதத்தின் நலனுக்காகத் தங்களின் தேசியப்பணி தொடர, வெற்றியோடு தாங்கள் நடை போட வாழ்த்துகிறேன்.

குவைத், 12-9-1981 —துரைராஜ்.

பேட்டி : எஸ். சந்திரமௌலி

Printed by V. Murali and Published by V. Vaidyanathan on behalf of Messrs Bharathan Publications Private Ltd, at the Bharathan Press, Race Course Road Guindy, Madras-600 032. (Phone: 431543)

Assistant Editor: P.S. Mani Editor: K. Rajendran

REGISTERED No. M. 4092
Registered as a Newspaper in Sri Lanka